

# ஸப்தகிரி

ார்ச், 1984

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



*கலயபதே ஸுகஸங்கயயா வ்யபகதே ழாஸே ச ழாகாபிதே*
*வாஷே சாபி பராபவே ஸுரதரோவாரே ச பக்ஷே ஸுசௌ।*
*தவாத ஸயாகயதிதௌ புநாவஸுதிரே பரீதயாகயயோகாநவிதே*
*தராதுழ ந தலஸேகர க்ஷிதிபதிஸ ஸ்ரீகௌஸதுபாதழாஸபவத॥*

கலியுகததில 'ஸுக' எனகிற எழுததுககளால ஏறபட்ட 27 வருடஙகள சென்றவளவில, பராபவ எனனும வருடததில, மாசி மாதததில, சுகல பக்ஷததில, துவாதசி திதியில, வியாழககிழமையில, புநாவஸு நடசததிரததில பிரீதி எனனும யோகததில ஸ்ரீ கௌஸதுபததின அமஸபூதரான குலசேகராழவாா எனனும் அரசர் தமமை ரக்ஷிபபதறகு அவதரிததருளினா.

—தனியன்.




தனிபபிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

மார்ச் 1984

மலா 14
இதழ் 10



*சிறபபாசிரியர்*

**திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி I.A.S.,**
செயலாடசித தலைவா,
தி தி தேவஸதானம, திருப்பதி.

*ஆசிரியர்*

**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**

*துணையாசிரியர்.*

**திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

*அசசிடுபவர்:*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸதான அச்சகம,
திருப்பதி.

**பிரதிகளுக்கு:**
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.


# உள்ளுறை



| | |
|---|---|
| முகபபு அடடையில் | ஸ்ரீ வேங்கடேஸவரா. |
| 2-வது உள் அடடையில | ஸ்ரீ குலசேகராழ்வாா. |
| 3-வது உள் அடடையில | ஸ்ரீ வியாசராயா. |
| 4-வது பின் அடடையில : | ஸ்ரீ அன்னமாச்சார்யாா. |

# உங்களுடன்....

காட்டு விலங்கினைப் போன்று தனித்து உண்டு உறங்கி வாழ்ந்த மனிதன், நாளடைவில் கூட்டமாக வாழத் தலைப்பட்டான். அத்தருணத்திலிருந்து நாகரிகமும் கலாசாரமும் வளரத் தொடங்கின. உணவினைப் பச்சையாக உண்ட அவன் பின்னர் அதனை நெருப்பிலிட்டுப் பக்குவமாகச் சமைத்துச் சாப்பிட கற்றுக்கொண்டான். குகைகளிலும், மரப் பொந்துக்களிலும் வாழ்ந்த அவன் கூரை வேய்ந்து தன்க்குடில் அமைத்து அதில் வாழத் தெரிந்து கொண்டான். பின்னர் இயற்கையின் சீற்றத்தைக் கண்டு அஞ்சிய அவன், அவற்றை வழிபடும் முகத்தான் அவற்றிற்குத் தன்னுருவம் கொடுத்து அவற்றை மரத்திலும் கல்லிலும் வடித்தெடுத்தான். இவ்வளர்ச்சியின் முதிர்ச்சியின் காரணமாக, அத்திருவுருவங்களுக்குச் சிறிதும் பெரிதுமான கோபுரங்கள் கட்டிப் பல ஆலயங்களை உருவாக்கினான். இதுவே கலியுகத்தில் மனிதன் கண்ட ஆன்மீக வளர்ச்சி.

இமயம் முதல் குமரி வரை மனிதன் தோற்றுவித்த கோவில்கள் பல. அவற்றுள், யுகங்கள் தோறும் இறைவன் எடுத்த அவதாரச் சிறப்புக்களாலும், அவ்வவதாரம் சம்பந்தப்பட்ட புராணம் மற்றும் இதிஹாஸ சிறப்புக்களாலும், அப்பரம்பொருளின்மீது பாக்கள் பலபாடி, அவ்இறை அனுபவத்தை முழுமையாகப் பெற்ற மெய்யடியார்கள் வாழ்ந்த மற்றும் அவர்கள் வழிபட்ட சிறப்புக்களாலும், சமயம் சம்பந்தப்பட்ட அதிசய நிகழ்ச்சிகள் நடைபெற்ற காரணங்களாலும் பெருமையும் புகழும் வாய்க்கப் பெற்ற திருத்தலங்கள் நம் நாட்டில் பல உண்டு. இவைகளுள், நமக்குச் சில நூறாண்டுகளுக்கு முன்பு நம் போலவே பிறந்து வாழ்ந்து, ஆனால் நாம் காணாத, உணராத இறைமையை அனுபவித்து, தங்கள் அனுபவங்களை இலக்கிய ரசத்தில் ஊற வைத்து, சாமானியனும் படித்து அறிந்து இன்புறும் வகையில் பல பக்திப் பனுவல்களைத் தந்த இறையடியார்களுக்கு என்றுமே சமய உலகத்தில் ஒரு தனிச்சிறப்பிடம் உள்ளது.

பக்தி மூலம் நாட்டில் ஒருமைப்பாட்டு உணர்வினை மறைமுகமாகப் பரவச் செய்த பெருமையும் அடியார்களுக்கு உண்டு. தம் பாக்கள் மூலம் தெய்வத் தன்மையை நமக்குணர்த்தி, தாங்கள் அவ்இறைவனின் 'தேவ தூதர்களே' என்று கூறாமல் கூறிச் சென்றுள்ளனர் அவ்வடியார்கள். இறைவனுக்கும் நமக்கும் ஓர் ஆன்மீகப் பாலமாக இருந்து, நம்மிடம் இறைமைப் பண்புகளை வேரூன்றச் செய்யவே மெய்யடியார்கள் நம்மிடம் வந்து சென்றார்கள் என்று கூறினால் அது மிகையாகாது. எளிமையும் அன்புமே அவர்களது ஆடை ஆபரணங்கள்; கடவுட்தொண்டே அவர்களது முழுமூச்சு. இறைவன், தன்னைவிட தன் அடியார்களுக்கு ஏற்றம் தருவதையே விரும்புகின்றான். அத்தகு அடியார்கள் வாழ்ந்த திருத்தலங்களும், வழிபட்ட திருத்தலங்களும் நம் உள்ளத்தில் ஓர் ஆன்மிக விழிப்புணர்வினை நிச்சயமாக சிலிர்த்தெழச் செய்யும் என்பதற்கு, மாமாயன் நின்ற வண்ணம் நாள்தோறும் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு தன்னருள் வீசி வரும் திருத்தலமாகிய இத்திருமலையே நமக்கு சாட்சியும் காட்சியுமாகும். வடநாடு தென்னாடு பேதமின்றி, ஜாதி உணர்வின்றி, மொழி வேறுபாடின்றிப் பல்வேறு கால நேரங்களில் புராணம், இலக்கியம் மற்றும் சரித்திரச் சிறப்புக்களைக் கொண்ட இத்திருமலைக்கு வந்து, ஏழுமலையானின் அருள் பெற்ற அடியார்கள் பலர். அவர்களுள் தேனினும் இனிய தமிழ்ப் பாக்களால் வைணவ சமயத்தைப் பரப்பிய ஆழ்வார்களும் குறிப்பிடத் தகுந்தவர்களாவர்.

விண்ணைத் தொடும் மாட மாளிகைகளும், கண்ணைப் பறிக்கும் நவரத்தினங்களும் நம்மோடு வருவதில்லை, நம்மை நாமே அறிவதன்மூலம் அப்பரம்பொருளினை நாடுவதே நம் பிறவியின் இலட்சியம் என்று அறிந்து அரியாசனத்தைத் துறந்து அரிநிவாசத்தை-திருமலையை அடைந்து, அங்கு தன்னுடைய அடுத்த பிறவி மீனாகவோ, குருக்காகவோ, செண்பக மரமாகவோ, கோயிலின் படியாகவோ இருந்திட வேண்டும் என்று வேண்டி உருகி, அத்திருவேங்கடவனை வழிபட்ட குலசேகராழ்வாரின் ஜெயந்தி விழா இம்மாதம் வருகின்றது.

இற்றைக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு, இத்திருமலையினையே தனது இருப்பிடமாகக் கொண்டு, 'அன்னி சோடல பரமாத்ம நீவு. இன்னி ரூபல பிரமயந்துவுக' என்று தொடங்கும் பாடலின் மூலம் இமயம் முதல் குமரி வரை உள்ள எல்லா தெய்வத் திருவுருவங்களையும் ஏழுமலையானிடமே கண்டு அவனையே பரம்பொருளாகக் கொண்டு தான் வாழ்வதை நமக்குக்கூறி, அவ்நெடியோன்மீது முப்பத்திரண்டாயிரம் கீர்த்தனைகளைப் புனைந்து, பக்தி மற்றும் தெலுங்கு இலக்கியத்தில் ஒரு மறுமலர்ச்சியினை ஏற்படுத்தியவருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாசார்யாரின் நினைவு நாள் விழாவும் இம்மாதத்திலேயே வருவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்

ஸத் வைஷ்ணவ சமயத்தைப் பரப்ப வந்த அடியார்களில் குறிப்பிடும் வகையில் விளங்கி ''ஏக முனிகளித்து ஏனுபல வியாசமுனி மாடித'' என்று சிறப்பிக்கப்பட்டு, வடமொழியிலும் கன்னட மொழியிலும் பல பக்திப் பாடல்கள் புனைந்து, சுமார் பன்னிரண்டு வருடங்கள் திருமலையில் வாழ்ந்து, வேங்கடவனை ஸர்வாலங்கார பூஷிதராய் தரிசித்துத் தான் வழிபடும் முதற்கடவுள் இத்திருமலையானே என்று கூறி அவன்மீது பல பாக்கள் பாடிய ஸ்ரீவியாசராயரின் ஆராதனை விழாவும் இம்மாதத்தைப் புனிதமாக்குகிறது.

மனிதன் மாண்புடன் திகழ்ந்திட சமயம் ஒன்றே அவனுக்கு உற்ற உறுதுணை என்பதையும், இக்கலியுகத்தில் இத்திருவேங்கடவனே அவனுக்கு இறுதிப்புகலிடம் என்பதையும் கூறாமல் கூறும் வகையில், இனம், மொழி மற்றும் இட வேறுபாடுகளைக் கடந்து, அப்பரம்பொருளின் அவதாரச் சொரூபிகளாக இருந்து, பல பக்திப் பாக்களை யாத்து, நமக்கு வாழ்க்கை இரகசியத்தினை உணர்த்திய மேற்குறிப்பிட்ட அம்முப்பெரும் அடியார்களின் அடிபணிந்து, வினை தீர்க்கும் அவ்ஏழுமலையானை நாளும் தொழுதேத்துவோமாக !

# செய்திச் சுருக்கம்

## புததாண்டு அனறு

எநத ஆணடும இலலாத வகையில, இவவாணடு 1-1-84 அனறு திருமலைககு 80,000க்கும் மேறபடட யாததிரிகாகள வருகை புரிநது ஏழுமலையானைத தரிசிததனா. 31-12-83, 1-1-84 மறறும 2-1-84 தேதிகளில திருமலைககு வரும கூடடததை எதிாபார்ததே, திருமலையிலும, திருபபதியிலும தி. தி. தே. செயலாடசிததலைவரின் மேறபாாவையில் தங்கு வசதி, தரிசன வசதி, உணவு வசதி ஆகியன பெரிய அளவில ஏறபாடு செயயபபடடன 1-1-84 அனறு காலை 3 மணியிலிருநது அடுத்த நாள காலை 2-30 மணி வரை தரிசனததிற்காக கோயில் திறநது வைககபபடடது

1-1-84 அன்று கோயிலின வருமானம சுமாா ரூ 20 இலடசமாகும இதில் உண்டியல மூலமாக கிடைககபபெற்றது சுமார் ரூ. 9 இலடசமாகும்.

## திருமலையில அயலநாட்டார்

அமெரிககாவின ஏல் பல்கலைக் கழகததைச சாாநத இரு பேராசிரியாகளான டாகடா உடா ப்ரேங்கே மறறும டாகடா ஹைன்ஸ பாதமோ ஆகியோா அணமையில திருமலைககு வருகை புரிநது, குறிபபிட்ட சில விதிமுறைகளை அனுசரிதத பிறகு, ஸ்ரீ வேஙகடேஸவரரைத தரிசிததனா திருமலையில திகழநத சுறறுபபுறத் தூயமையினைப பாராட்டி தி திருமலையிலும, கோயிலினுளளும நிலவிய ஆன்மிக அமைதியினை நினைவு கூாநத அவாகள, இறைவனுககு முன தஙகளுககு ஏறபட்ட இறையனுபவத்தினையும வெளியிடடனா பினனா அவாகள தி தி தே செயலாடசித் தலைவரை சநதிததது, மேலாணமையின நிாவாகப பொறுபபினைப பாராட்டினா

ஃ ஃ ஃ

### திருபபாவைச் சொறபொழிவு

திருபபதி ஆஸதிக பெருமககள சாாபில 15-12-83 முதல 14-1-84 வரை பிரதி தினமும இரவு 7-30 மணி முதல 8-30 மணி வரை, முதன் முறையாக, இதுவரை நடைபெறுத. திருபபாவை முபபது பாககளின வ்யாகயானஙகளை ஸ்ரீமான வித்வான் திருமலை அனநதாண்பிளளை கிருஷ்ணமாசாரியா ஸவாமி வெகு அழகாக உபனயாசம செயதாா். இந்நிகழ்ச்சி ஸ்ரீமந நாதமுனிகள ஸநநிதியில் நடைபெறறது சிறபபுடையதாகும. வேதம், உபநிஷததுககள, இதிகாச புராணஙகள், மறறும திவய ப்ரபநதஙகள, வேதாநத தேசிகா, ஸ்ரீமகா காருணிகரான பெரியவாசசான பிளளை, அழகிய மணவாளப் பெருமாள நாயனாா, மறறும திருநாராயணபுரதது ஆய முதலானோா உரை கொண்டு திருப்பாவையை மிகவும சிறபபாக எளிய தமிழில் உபனயசித்தாா. மறறும காலம சென்ற ஸ்ரீ உ. வே. காஞ்சி அணணஙகராசாாய ஸவாமி உளளுறை பொருள கொணடு திருபபாவையில ஆழவார்கள பதினமரையும எழுபபியதை நம ஸவாமியும பினபறறி உபனயாசிததாா

15-1-83 அனறு திருபபாவை சாறறுமுறை வெகு சிறபபாக கொணடாடபபட்டது. 'திருப்பாவையில ஆசசாவதாரம்' என்ற பொருளில் திருவேஙகடததுறைச செலவனையும திருவரஙகத்துறைச் செலவனையும் கொண்டு திருபபாவையில அர்சசாவதாரம் பற்றிய உட் பொருளை எடுத்து உபன்யாசிததாா. ஆஸதிக பெருமக்கள 30 நாளும செவிக்கினிய செஞ்சொலலான திருபபாவை உபன்யாசம் கேட்டு பயன பெற்றனா.

தகவல். எம. வரதராஜன்.

ஃ ஃ ஃ

அணமையில திருப்பதி ஸ்ரீ பரகால மடத்தில திருபபாவை உபன்யாசம செயயும் ஸமயததில ஸ்ரீமான புதுக கோட்டை க்ஷாத்ரி அயயங்கார் ஸவாமிகள ஸ்ரீ வேஙகடேச பஜ நாமாவளி என்னும் புஸ்தகத்தை வெளியிட்டாா. ஸ்ரீமான். பி. ரஙக ராஜன ஸவாமி உபனயசித்தனா. அஙகு வநதிருநதவர்கள அனைவருக்கும புஸதகம இலவசமாக வழங்கபபடடது

தகவல்' என். எஸ. வி. ராகவன.

## புரோஹித் சங்கம், திருமலை

### கட்டண விவரங்கள்

| | ரூ பை. |
|---|---|
| பிராமணா மறறும வைசியா திருமணம | 50–00 |
| பிராமணா மறறும் வைசிய உபநயனம | 40–00 |
| மறறைய திருமணஙகள் (ஹோமம இலலாதது) | 30–00 |
| மறறைய திருமணஙகள் (ஹோமததுடன அலலது கனயாதானததுடன நடைபெறுவது) | 36–00 |
| சதய நாராயண விரதம | 20–00 |
| கேஸ கண்டனம மறறும மறறைய பூசைகள | 10–00 |
| பிணட பிரதானம | 5–00 |
| ஹிரண்ய கோதானம | 6–00 |
| அனனதானம | 3–00 |
| சாளிகராம தானம் | 1–25 |
| சஙகலபம | 1–00 |
| ஸோடஸ மகாதானம் | 16–00 |
| தஸதானம | 10–00 |
| நவகரஹ தானம | 9–00 |
| சங்கலபம, பூசை | 1–00 |

தி. தி. தேவஸதான நூல வெளியீடுகளையும ஸபதகிரி பத்திரிகையினையும் பெறவிருமபும அனபாகள் "Welfare Officer, in-charge of sale of Publications, T T D Tirupati" எனும முகவரிககே, அதறகான தொகையினை அனுபபுதல் வேண்டும.

அது, நீளமான இரவுகளைக் கொணட காாத்திகைத திஙகள். வெளளி உதித்து விடிந்துவிடடால திஙகளகிழமை சேவலகள இனனமும சோமபல முறிககவிலலே பூபாளம பாடிட இயறகை சுதிசோததுக கொணடிருநதது. ஆனால் . .

அநத இடைசசி மடடும மததினால மோரைக கடைநது, வெண்ணேயைத் திரட்டும பணியை முடிககும தறு வாயில் இருநதாள வேலே வேலேயாக களைத தெனமேறகு திசைநோக்கி நடக்கவிடடாள் ஆயசசி தலேயில் தயிாப்பானே, இடுப்பில் பால பானே

திருவிதாஙகூா மகாராஜாவுமமகா ராணியும தங்கி இருககினற கொட் டாரத்தை அடைய இனனமும் ஒரு கல தூரமதான இருககிறது.

சுமைதாஙகியில தன சுமைகளே இறக்கி வைத்து, அருகில அமர்நத ஆயசசி, பெருத்து வளாநதிருநத அரச மரததையும, நெட்டையாய வானத்தைத தொடப்போன மூங் கண்ணீர் நினேவுகளேச் சுமநது கொண்டு புறபபட்ட காரிகையின கால்களில ஏதோ "தட" டெனறது. பானேகளுடன பூமியில் விழுநதாள் பாவை. பாவையின காலகளே பதம் பாாத்த மூங்கில் முளே ஒன்று பாலில் குளித்திருநதது "காலமபறயே இது என்ன சோதனை?" எனற நொநத மனத்துடன திரும்பிய ஆயச்சி, வரும் வழியில புதுபபானேயுடன இல்லத்தை அடைநதாள்.

# கண்ணன் குலமும் கடவுள் காட்சியும்



இருந்தாலும் ஆட்டுக கிடையில அமர்நது உறஙகிக கொணடிருககும ஆயனின முகததை நினேவுப் புததகத் திலிருநது அககககணகளால பாாததுப புனனகைததுக கொண்டிருந்தாள.

கதிரவன தன பயணததைத தொடங்கும முன்னரே தன கால கிலேயும பாாத்தாள. தன ஆயன ஆட்டுககிடைககு தன்முறை வரும் பொது அரசமரத்தைப்போல புறப படடுபபோய முறை முடிநது மூஙகி லாய இளேத்துத திருமபுவதை நினேத துபபாாத்த போது கன்னஙகளில கண்ணீா அருவி பாயநதது.

பானே உடைநது, பாலும தயிரும் பாழாய்ப்போனது கேட்ட மாமி யாரின் முகமும புதுபபானே போல் மாறிறறு

மூன்று திஙகள கிழமைகள மூக குத்திப்பெண்ணின் முகம சிவககச செய்தன மூஙகில் முளேகள

ஆடடுக கிடையில் தனமுறை முடிநது அன்று இரவு வரபபோகி றான ஆயன.

ஆயசசியின உளளம மகிழசசியில மிதநது கொணடிருநதது.

ஆயில்யன்—சீர்காழி

மூஙகில் முளே விவகாரததிறகு முககிய இடம ஒதுககி இருநதாள

ஆயன—தோளில் நீளகம்பு, இடுப பில ஆடுகளுககு இலேவெட்டும அரி வாள், எணணெயைககணடு ஒரு மாத மான பரடடைததலேயில முணடாசு கிரீடததுடன வநதான.

துளசி ஊறிய தணணீரைக குடிககக கொடுததாள. தலேககு நெயயைத தேயததாள.

"என்னமோ பேசசியமமா? ..ஒம் மொவததுல எனனமோ ஒரு தெளிவு

இல்லியே என்னு ன்னு சொல்லுடடி?'

'' .. ... ''

''அமம என்னவாஞ் சொன்னளா? அவ வயசு காலத்துல என்னவாம பொலப்பிட்டே கெடப்பா அதைல லா பெரிசா எடுத்துட்டு அலலாடா தட்டீ பைததியாரி''

'' அதத ஒண்ணுஞ் சொலலல்ல (பொய்த்தாள்) ஆனு.. ''

'' ஆனு ஆவன்னல்லா ஆடுமாடு மேயக்க நமககு எதுக்குள்ளா?''

'' நா .பாலுந்தயிரும கொண்டு போசசில, பழையாத்த தாணடி கொஞச தூரம் போனதும ஒரு மூங்கில மொள எங காலதட்டி பாலுநதயிருங கொட்டிறறு.''

''நீ வேற வழியிலதானப போணும''

''அடுத்த திங்ககெழமை கொஞ்சம் தளளிதான போனே, ஆண்ணக கும் தட்டிறறு. மறுதிங்ககெழமை யும் தட்டிற்று...''

''என்ன அலுசுவமா இருககு? . நாளைக்கி நானு வாரே அநத மூணு மொளையும வெட்டி எறஞசாத்தா, சரி''

வென்னீா குளியலில் அயர்நது உறஙகினன ஆயன

விடியலில ஆயனும ஆயசசியும் மூங்கில் காடடை அடையும போது கிழககு வெளுததிருநதது. கொககுகள தேரூா குளம நோக்கி இரை யெடுக்க படையெடுத்துக கொண டிருந்தன.

''இனனு ஒண்ணு, அனனு ஒணணு, அணணு ஒணணு ' — மூககிலகளை அடையாளம் காட்டினள் ஆயச்சி

'எவ்வளவு ரெதத கொழுபபு இருககுமினனு எமபேசசிககு காலத தடடி பாலாபிசேகம கேபப?'' மூங கில முளையை ஓங்கி வெட்டினன ஆயன.

ஆயனின கணகள் சிவநதன, கோபததால அல்ல ஆச்சரியததால்.

மூஙகிலின முளையிலிருநது ரத்தம் வழிநது கொண்டிருந்தது.

ஒரு முளையில் வெட்டுபபடடதும் மறற இரண்டு முளைகளிலிருந்தும் குருதிச சொடடுகள துளிர்த்தன.

ஆய்சசி மயங்கிச சாயநதாள்.

ஆயன் தலைவணஙகினன.

வானததில் ஒரு குரல்.

'' நாஙகள சிவன விஷ்ணு பிரமமா மூவருமதான எஙகள மூவரையும ஒரே உருவததில இநத இடத்தில நிலை நிறுததி தாணுமாலயன் என்று அழைதது பூஜை செயய அரசனிடம சொல்லுங்கள். உங்கள குடும்பததாரே காலம காலமாக எங்களுககுப் பாலாபிஷேகம செய யட்டும் . ''

அநதககுரல ஆயனின காதில் மீண்டும .மீணடும ..மீணடும .ஒலிததுக கொணடேயிருநதது

ஆம ..தாணுமாலயன அருள பொழியும அநத பதிதான சுசீநதிரம

சூதுவாது அறியாத ஆயனுககும் ஆசசிககும மும்மூாததிகளும ஒன றாக முதலில் காட்சி கொடுத்தது சிறபபனறோ.

—கிருஷண பகவான் வளர்ந்தது இடைக குலத்தில.

—இயேசுநாதர் பிறநதது மாடடுத தொழுவத்தில.

—அனனை வேளாங்கண்ணி ஒரு இடைச்சிறுவனுககே முதலில் காட்சி தந்தாள்.

—ஔவைக்குச்சுட்டக்கனிவேண்டுமா? சுடாத கனி வேண்டுமா? எனக கேடக முருகன பூண்டது இடைச்சிறுவன வேடம

—கணணகியும கோவலனும அடைககலம புகுநதது ஆயசசியின் வீட்டில.

—மீண்டும இவ்வுலகில மனிதனுயப் பிறநதால ஒரு இடைசசியின் வயிற்றில் பிறகக வேண்டும என்றா மகாதமா காநதியடிகள.

இவையெலலாம கண்ணன குலத்துககும கடவுள காட்சிககும் உளள தொடர்பு பறறித தெளிவுபடுததுகினறனவனறோ.

★

# வேங்கடவன் யார்

**அனந்தமங்கலம் ராஜகோபாலன்.**

வேஙகடவன யாா எனபதறகு பல புராணஙகள பல விதமாக விளககம அளிதத போதிலும ஆதித்ய புராணம மிகச சிறபபாக விளககமளிககிறது. ஆதிதய புராணததில காணபபடும ஸலோகம இதோ'

க்ருதே து நரஸிமஹோபூத் த்ரேதாயாம் ரகுநந்தந. ।
த்வாபரே வாஸுதேவஸ்ச கலௌ வேங்கட நாயக. ॥

கிருத யுகத்தில் நரசிம்ம மூாத்தியாக அவதாரம செயதவரே திரேதா யுகததில் இராமனுக அவதாரம் செய்தார், அவரே துவாபர யுகததில வாசுதேவன புதல்வனுன கண்ணனுக விளங்கினர். இவரே கலியுகத்தில் வேங்கடவனுக விளஙகுகிறுர்.

# பாகவத தர்மம்

நைமிசாரண்ய க்ஷேத்திரத்தில் கூடியிருந்த தபோதனர்களான சௌனகாதி மகரிஷிகள் ஒரு சமயம் ஸ்ரீஸூதரைப் பார்த்து பூலோக வைகுண்டம் எது, உயர்ந்த வைணவ க்ஷேத்ரம் எது என்று வினவினர்.

ஸ்ரீ நிவாஸன் உறையும் திருவேங்கடமலையே க்ஷேத்ரங்களிலெல்லாம் உயர்ந்த க்ஷேத்ரம், பரம பாவன க்ஷேத்ரம் என்று ஸ்ரீ ஸூத முனிவர் கூறினார். அங்குள்ள தீர்த்தங்களின் மகிமைகளையும், திருவேங்கடவன் அருள் பெற்ற பாகவதோத்தமர்களின் சரிதங்களையும் எடுத்துக் கூறி மகரிஷிகளை மகிழச் செய்தார். யாவரும் பரமனின் பக்தி பரவசத்தில் திளைத்து நின்றனர்.

''ஹே தபோதனர்களே! நைமிசாரண்ய வாசிகளே! ஆகாய கங்கையின் (திருமலையில் கோயிலினின்று சுமார் எட்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது) பெருமை அளவிடற்கரியது'' என்று ஸ்ரீ ஸூத முனிவர் கூறி அதன் கரையில் தவம் புரிந்து வந்த ஸ்ரீ இராமானுஜ முனி என்ற விஷ்ணு பக்தனின் வரலாற்றைக் கூறலானார். பின்னர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் தன் பக்தன் எப்படியிருப்பான் என்று ஸ்ரீஇராமானுஜ முனியிடம் கூறியவாறு பாகவதனின் இலக்கணங்களையும் கூறுவதாய்க் கூறி ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத் தியானித்து சொல்லத் துவங்கினார்.

பஞ்சாக்னி மத்தியில் புலன்களையெல்லாம் அடக்கியவராக இராமானுஜ முனி ஸ்ரீவேங்கடேசப் பெருமானைத் தியானிப்பதிலேயே காலத்தைக் கழிப்பவராய் திருமலையில் ஆகாய கங்கையின் கரையில் தவம் புரிந்து வந்தார்.

आकाशगङ्गानिकटे सर्वशास्त्रार्थपारगः ।
रामानुज इतिख्यातो विष्णु भक्तो जितेन्द्रियः ॥

எப்போதும் அஷ்டாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டு உள்ளத்தில் ஜனார்த்தனனைக் கண்டு மகிழ்ந்து அவன் திருவடிகளிலேயே மனதை நிலைபெறச் செய்திருந்தார்.

தன்னை மறந்து யோகத்தில் ஆழ்ந்திருந்த இவரிடத்தில் வெயிலும் பனியும், காற்றும் குளிரும் சிறிதும் வருத்தத்தை ஏற்படுத்தவில்லை. இவர் சுக துக்கங்களை சமமாக பாவித்திருந்தார். இவர் தவம் புரிந்து வந்த ஆகாய கங்கையின் ஒரே துறையில் பசுவும் புலியும் விரோதமின்றி நட்புடன் நீர் பருகின. இவரைச் சுற்றிலும் அமைதி குடிகொண்டிருந்தது. अहिंसा प्रतिष्ठायां तत्सन्निधौ वैर-त्यागः ॥ என்ற யோக சூத்திரத்திற்கு இவர் எடுத்துக் காட்டாயிருந்தார்.

முதலில் காய்கனிகளை உண்டு தவம் புரிந்து வந்தார். காலம் செல்லச் செல்ல உதிர்ந்த இலைகளை மட்டுமே உணவாகக் கொண்டு தவமியற்றினார். சிறிது காலம் சென்ற பின் நீரை மட்டும் பருகி வாழ்ந்தார். பின்னர் பகவத் பிரேமையில் தன்னை மறந்தவராய் நீருமின்றி காற்றையே உணவாகக் கொண்டு கடுந்தவம் புரிந்து வந்தார்.

कश्चित्काल जलाहारो वायुभक्ष
कियत्समाः ॥

இவர் தவத்திற்கு இரங்கி தேவ கணங்கள், ரிஷிகணங்கள் சூழ கோடி ஸூர்ய பிரகாசத்துடன் சங்கு சக்கர பீதாம்பரதாரியாய் தயாநிதியாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் இவர் முன் தோன்றினார். ஸ்ரீ இராமானுஜ முனிவர் மெய் சிலிர்த்தவராய், ஆனந்தக் கூத்தாடுபவராய், அகத்தே கண்டு கொண்டிருந்த பெருமானைப் புறத்தேயும் கண்டு புளகாங்கிதமடைந்தவராய், 'தேவ தேவனே உனக்கு நமஸ்காரம், சங்கு சக்கர கதாதாரியே உனக்கு நமஸ்காரம், நித்ய சுத்த புத்த வேங்கடேச பிரபுவே உனக்கு நமஸ்காரம், வாஸுதேவனே உனக்கு நமஸ்காரம், சார்ங்கபாணியே உனக்கு நமஸ்காரம், வேங்கடகிரி வாஸனே உனக்கு நமஸ்காரம்,'' என பலவாறு பாடித் துதித்தார்.

नमो देवाधिदेवाय शङ्खचक्रगदा भृते ।
नमो नित्याय शुद्धाय वेङ्कटेशाय ते नमः ॥
नमस्तुभ्यं भगवते वासुदेवाय शार्ङ्गिणे ।
भूयो भूयो नमस्तुभ्य वेङ्कटाद्रि निवासिने ॥

பரமனை நமஸ்கரித்து எழுந்து பக்தியுடன் பேசலானார்.

நாராயணா! இரமாநாத! ஸ்ரீநிவாஸா! ஜனார்த்தனா! ஜகந்நாதா! கோவிந்தா! நான் கிருதார்த்தனானேன். என்ன புண்ணியம் செய்தேனோ தெரியவில்லை, இன்று நின் தரிசனம் கிடைக்கப் பெற்றேன். ஹே வேங்கடேசா! உன் நாமத்தைச் சொல்லுமளவிலேயே ஒருவனது மகா பாவங்களும்கூட அழிந்து விடுமே. நின் தரிசனத்தைக் காட்டிலுமா முக்தி பெரிது. ஹே பிரபோ! உனது தாமரைத் திருவடிகளில் மாறா பக்தி யிருக்கும்படி அடியேனுக்கு அருள்வாய். நான் வேறு எதனையும் இச்சிக்கவில்லை. உன் பாத கமலங்களில் அல்லாமல் வேறு எங்கு ஒருவன் அழியா இன்பத்தைப் பெற முடியும்.

இவ்வாறு பலவாறாய்க் கூறித் துதிக்கவும் இராமானுஜரைப் பார்த்து பரமன் பகரலுற்றார்.

ஏ இராமானுஜ! உனது உறுதியான அன்பு என்னை இங்கு இழுத்துக் கொண்டு வந்துவிட்டது. இந்த என்

திரு. என். ராமன்—கும்பகோணம்.

வாாததைனயக கேடபாயாக. சித்திரை மாதம சிததிரை நக்ஷததிரத்தில, பௌாணமி தினததில இநத ஆகாய கஙகையில நீராடி எனனை வழிபடுவோன நிசசயமாக மறுபிறவியை அடைய மாட்டான என திருவடி நிழலிலேயே நிறபான

मेषसङ्क्रमणेभानोश्चित्रानक्षत्रसंयुते ।
पौर्णमास्या च गङ्गायां स्नानं कुर्वन्ति ये जना ।
ते यान्ति परमं धाम पुनरावृत्तिवर्जितम् ।।

அனபனே! நீ இததீாததக கரையிலேயே வசிப்பாயாக இததீரம பரம பாவனமானது. வேறு காரியமினறி இதில நீராடி எனனை வழிபடும பாகவதோததமர்கள் உத்தம கதியை அடைவது உறுதி

किं लक्षणा भागवता ज्ञायन्ते केन कर्मणा ।
एतदिच्छाम्यहं श्रोतुं कौतूहल परोयतः ।।

"ஹே பிரபோ! பாகவதன என போன யாா? அவன எவ்வாறு இருபபான? எககாமம புரிவான? நான அறிய விருமபுகிறேன" எனறு ஸ்ரீ இராமானுஜா கேடகவும ஸ்ரீ வேஙகடேசப பெருமான கூறலுறறாா

श्री वेङ्कटेश उवाच ।।

முனிவர்களில சிறநதவனே! பாகவதாகளின லக்ஷணஙகளைக கூறக கேட்பாயாக அவாகள பிரபாவம சொலலறகரியது

ये हिता· सर्वजन्तूना गतासूया विमत्सरा ।
ज्ञानिनो नि स्पृहाः शान्ताः ते वै भागवतोत्तमा. ।।

எலலா உயிாககும நனமையே செய்பவர்கள், பொறுமையுறறவாகள், காவ மறறவாகள, ஞானிகள, பற்றற்றவர்கள், உளளம அடஙகியவாகள இவாகளையே பாகவதோததமர்கள் என்றறிவாயாக.

மனம வாககு காயம இமமூனறிலும பிறருககுத தீஙகு இழைககாதவர்கள், மாறறான பொருளில ஆசை வைககாதவர்கள், ஒழுககமுடையவர்கள், புராணங்களைக் கேடபதில விருபபுடையவாகள, ஸாதவீக எணணமுடையவாகள், என திருவடிகளில் அனபு பூணடவாகள இவாகளே பாகவதோததமாகள.

कर्मणा मनसा वाचा परपीडां न कुर्वते ।
अपरिग्रह शीलाश्च तेवै भागवतोत्तमा ।।
सत्कथा श्रवणे येषां वर्तते सात्विकी मतिः ।।
मत्पादाम्बुज भक्ता ये ते वै भागवतोत्तमा ।।

பெறறோாகளுககுப பிரியமுடன பணிவிடை புரிபவாகள, பரமனை பூஜிபபதில ஆாவமுடையவாகள். அறம பேணும அநதணாகள துறவிகள எனபோாககுப பணிவிடை செய்வதை உயாவாககக கருதுபவாகள, பிறரைப பறறி அவதூறுகப் பேசாதவாகள் பாகவதோததமாகள.

मातापित्रोश्च शुश्रूषा कुर्वते ये नरोत्तमा ।
ये तु देवार्चनरता ये तु नत्साधका नराः ।।
वर्णिना च यतीनां च परिचर्यापराश्चये ।
परनिन्दामकुर्वाणास्ते वै भागवतोत्तमा ।।

தனனுயிா போனறு மனனுயிரெலாம நேசிப்பவாகள, நண்பனையும் பகைவனையும சமமாகவே கருதுபவாகள, அற நூலகளினபடி ஒழுகுவோாகள, உணமை பேசுபவாகள, மாற்றுனின வளாசசியைக் கணடு பொறுமையுறுமல மகிழபவாகள் ஹரி நாமமே கதியென்றி யிருப்பவாகள பாகவதோததமாகள

आत्मवत्सर्वभूतानि ये पश्यन्ति नरोत्तमा. ।
तुलया शत्रुषु मित्रेषुते वै भागवतोतमा ।।
धर्मशास्त्रप्रवत्कारः सत्यवाक्यरताश्च ये ।
अन्येषामुदय दृष्ट्वा येऽभिनन्दन्ति मानवाः ।
हरिनामपरा य च ते वै भागवतोत्तमा ।।

குளஙகள அமைதது அவறறின கரைகளில தேவாலயஙகள நிாமாணிபபவாகள, காயத்ரீயை தொடாநது உபாஸிபபவாகள, ஹரி நாமததைச சொலவதிலும கேடபதிலும இனபுறுபவாகள, ஹரி நாமம கேடட மாததிரததில மயிாககூாசசெறிநது பரவசமடைபவாகள பாகவதோததமாகள.

ये वै तटाक कर्तारो देवसद्मानि कुर्वते ।
गायत्री निरता येच ते वै भागवतोत्तमाः ।
येऽभिनन्दन्ति नामानि हरे श्रुत्वाऽतिहर्षिताः ।
रोमाञ्चितशरीराश्च ते वै भागवतोत्तमा ।।

துளசீ கநததததை நுகாவதில மகிழபவாகள, துளசி மணி மாலையைக கழுததில அணிநது மகிழபவாகள, தததம ஆசிரமஙகளுககுரிய ஆசாரஙகளை முறையுடன பினபறறுபவர்கள, செல விருநது ஓமபி வருவிருநது பாாததிருபபவாகள, வேதததின உண்மைப பொருளைப பரபபுவோாகள பாகவதோததமாகள

तुलसीगन्धमाघ्राय सतोष कुर्वते तु ये ।
तन्मूलमृध्दरा ये च ते वै भागवतोत्तमाः ।।
स्वाश्रमाचारनिरता. तथैव अतिथि पूजका ।
ये च वेदार्थ वक्तारः ते वै भागवतोत्तमाः ।।

தணணீர்பபநதல வைபபவாகள, எனனிடம செலுததபபடட மனமுடையவாகளாய, எனனிடம அனபுகொணடவாகளாய, எனனை பஜிப்பதில் விருபபுடையவாகளாய, எனது நாமஸமரணததிலேயே காலததைக கழிபபவாகளாய இருபபவாகள எவாகளோ அவாகளே பாகவதோததமாகள.

पानीयदाननिरता ह्यन्नदानरताश्चये ।
एकादशीव्रतपरास्ते वै भागवतोत्तमाः ।।
मन्मानसाश्च मद्भक्ताये मद्भजनलोलुपा· ।
मन्नामस्मरणासक्तास्ते वै भागवतोत्तमा ।।

இவவாறு எனனால சுருககமாகச சொலலபபடட குணநலனகள யாவறறையும குறைவரப பெறறிருபபவனே பாகவதோததமன ஏ இராமானுஜ! நீ எனதனபிறகு உரியவனாயிருநததால இவறறை உனககுக கூறினேன நீ இஙகேயே யிருநது எனனை பஜிததுக கொணடிருபபாயாக

रामानुज महाभाग मद्भक्ताना च लक्षणम् ।
मयि भक्तेस्त्वयि प्रीत्यायुक्त किल महामते ।।

இவவாறு கூறிவிடடுப பரநதாமன மறைநதுவிடடாா. ஸ்ரீ ஸூத முனிவா கூறியனவறறைக கேடட சௌனகாதி மகரிஷிகள யாவரும மட்டிலா மகிழசசி கொண்டனா, திருவேஙகடவனைத துதிதது நினறனா. ★

# ★ அல்லி ராஜ்யம் ★

வைகாசி மாதம். பூமியே பூவாடை போர்த்தியிருந்தது, வஸந்தத்தின் வரவால் திருநறையூரிலே, எங்கு நோக்கினாலும் வாழைத் தோப்பும், மாந் தோப்பும், பாக்குத் தோட்டங்களும் நிலையான நீரும், சுகந்த வனம் என்னும் பெயருக்கேற்ப, மலரிகைகளிலே எத்தனையோ தினுசுகளும், மகிழமும் செண்பகமும், மனோரஞ்சிதமும், தாமரைகளும், எங்கும் சுகந்த பரிமளத்தை, வாரி வீசிக் கொண்டிருந்தன.

திருமங்கையாழ்வார் ஆறும், அரசலாறும், கோவில் புஷ்கரிணிகளும் தாமரைகளாலும், அல்லிகளாலும் நிறைந்து, நீரே தெரியாதிருந்தது.

திருநறையூரிலே, நம்பிக்கை நாச்சியாரின் ஆட்சிதான் கொடி கட்டிப் பறந்து கொண்டிருந்தது. நம்பி மூர்த்தியான பெருமாள், மூன்றங்குலம் பின்னாலேதான் எழுந்தருளுவார்.

ஒரு நாள் சாயந்திரம், பிராட்டியும் பெருமாளும், தம் பிரஜைகளைக் கண்டு வரப் புறப்பட்டனர். விடியும் வரை, நகர சோதனை செய்யலாம் என்று தீர்மானித்துக் கொண்டனர்.

அப்போதுதான் பெருமானை ஸேவித்துவிட்டு, திருமங்கையாழ்வார், பஞ்ச ஸம்ஸ்காரத்தால் தேஜஸ்ஸுடன் பொலிய புஷ்கரிணியின் படியிலே வந்தமர்ந்தார். பின், நிஷ்டையில் அமர்ந்தார். அவரை அனுசரித்தனர். மேலே செல்வதற்குள், என்ன தோன்றியதோ, பிராட்டி, சற்று, தாமதித்தாள். ஒரு பெரிய அல்லி மலரைக் கண்டு, அங்கேயே நின்றுவிட்டாள்.

அந்த அல்லி மலரில், ஒரு ஜோடி நண்டுகள், குடித்தனம் செய்து கொண்டிருந்தன. பெண் நண்டு, கர்ப்பமாயிருந்தது. மசக்கைத் தொந்தரவு, சற்றே அதிகமாய் வாட்டியது. நல்ல தேன் குடிக்க வேண்டும் போலிருந்ததால், கணவனிடம் சொல்லிற்று. உடனே, ஆண் நண்டு, மகிழ்ச்சியோடு புறப்பட்டது. ஆயிரம் முறை சொல்லிக் கொண்டு, விடை பெற்றுப் புறப்பட்டது.

நல்ல தேன் வேண்டுமென்றால், தாமரை மலர்களில்தான் இருக்கும் என்பதால், ஆண் நண்டு, தாமரை மலரிடம் சென்றது. எதிர் பார்த்தது போலவே, நீர் வளத்தாலே, தாமரை மலர் நன்றாய்ப் பருத்து, முற்றியிருந்ததால், தேன் நிறையவே கிடைத்தது. இன்னும் நிறையத் தேன் எடுத்துச் செல்லலாமே என்று, அடுத்த தாமரைக்குச் சென்றது. இப்படியே ஒவ்வொரு தாமரைப் பூவுக்கும் சென்று தேன் எடுத்த சுவாரஸ்யத்திலும், மகிழ்ச்சியிலும், ஆண் நண்டு, நேரம் சென்று, இருட்டி விட்டதை உணரவேயில்லை. பாவம், திடீரென்று, தாமரைப்பூ, மூடிக் கொண்டுவிட்டது. உள்ளே, நண்டு அகப்பட்டுக் கொண்டுவிட்டது.

ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரைப் பூவாதலாலும், இதழ்கள் மிகவும் நெருக்கமாயும் இருந்ததாலும், அந்த நண்டால் வெளியே வர முடியவில்லை. என்னென்னவோ செய்து பார்த்தது. இப்படியும், அப்படியுமாகப் புரண்டு, இதழ்களை விலக்கிக் கொண்டு, எப்படியாவது, வீட்டுக்குச் செல்லத் துடித்தது: ஊஹூம்.

இங்கே, பெண் நண்டு, வாந்தியெடுத்து, தலை சுற்றலும் அதிகமாகவே, அப்படியே மயங்கிப்படுத்து விட்டது. திடீரென்று விழித்துக் கொண்டு பார்த்தால், நல்ல நட்ட நடு நிசி சந்திரன் உச்சிக்கு வந்திருந்தான். படுத்துக் கொண்டிருந்த தன்னைத் தொந்தரவு செய்ய வேண்டாமென்று, கணவன், ஓசைப்படுத்தாமல், உறங்கிக் கொண்டிருக்கிறானோ, என்று சுற்றுமுற்றும் தேடியது. எங்கும் காணோம். கூப்பிட்டும் பார்த்தது ஆள் அரவமேயில்லை. சாயந்திரமே தேன் எடுத்து வரப் போனவர், நடுநிசி ஆன பின்பும் வராததால், மிகவும் கவலைப்பட்டது.

"நம்பிக்கை நாச்சியாரே! என் மாங்கல்யத்தைக் காப்பாற்றம்மா. உனக்கு திருமாங்கல்யம் சாத்துகிறேன்"-என்று உள்ளம் உருகி வேண்டியது.

பார்த்துக் கொண்டேயிருந்த நாச்சியாரும், 'அஞ்சேல்' என்று கரம் காட்டினார்.

ராத்திரி முழுக்க இப்படியே போய் விட்டது. பொழுது புலர்ந்தும் புலராத வேளை மெல்லத் தாமரை மலர், விரியத் தொடங்கவே, ஆண் நண்டு, 'தப்பித்தோம்-பிழைத்தோம்' என்று தேனை, ஜாக்கிரதையாக, துளிக்கூட கீழே சிந்தாமல், எடுத்துக் கொண்டு வந்தது.

---

திருமதி. மைதிலி வேணுகோபால், சென்னை

---

'அன்பே! இந்தா! புத்தம் புதிய தேன்' என்று ஆசையோடு கொடுத்தது. 'உனக்கு உடம்பு எப்படியிருக்கிறது?'-என்று மிகவும் கரிசனத்தோடு, விசாரித்தது.

'அடாடா! என்ன கரிசனம்! என்னை அக்கறை! உங்கள் அன்புக்கு உரிய வளைத் தேடிச் சென்றதால்தானே, இரவு வராமலேயிருந்து விட்டீர்கள்? இப்போது, யாரை அன்பே என்கிறீர்கள்?'

'தேன் அல்லவா எடுக்கச் சென்றிருந்தேன்?'

'ராத்திரி முழுதும் தேன் எடுத்தீர களாக்கும? வநது நிறகிற கோலததை பாாததாலே தெரிகிறதே! கட்டிய மனைவி நான இங்கே தவிததுக கொணடிருகக, கணடவளுடன், ஆட்டபாட்டம நடததியதால், மகரநதத் துளிகள, பாருங்கள், உடமபு முழுதும அபிஷேகமாகி யிருக்கிறது. இநத அலஙகோலத தோடேயே, என முன்னே வநது நிறக, உஙகளுககுச சிறிதும கூச்ச மாய இலலே? போஙகள் வெளியே, கதவை சாததப போகிறேன'' வருத தம, ஏமாறறம, கோபத்தால மன மும, கர்பபத்தினால் உடலும பல ஹீனமான நிலேயில், பெண நணடு கததியது.

''கிடையவே கிடையாது தாமரை மலர்களிலே, நிறையததேன இருநத தால, நிறைய எடுத்து வரலாம என கிற ஆசையாலே, ஒவவொரு பூவாக போய, எடுத்தேன. இருட்டியதே தெரியவிலலே. சூரியன் மறைநத தால, தாமரைப்பூ, மூடிக கொணடு விட்டது. ஆயிரம் இதழ தாமரைப பூவாதலால, இதழ்கள வேறு ஒன் றையடுதது ஒனறு, மிகவும நெருகக மாக இருநததால, நான இபபடியும அப்படியும புரணடு, குதிதது, என னெனனவோ செய்துமகூட,வெளியே வரவே முடியவில்லே. இதோ, பொழுது புலாநது, தாமரை திறநது கொணடதும, ஒரே ஓட்டமாய ஓடி வநது விட்டேனே அதனுலதான, மகரந்தப்பொடி, உடமபு முழுதும ஓட்டிக கொணடிருககிறது. நீ நினைப பது போல், தவறுக ஏதுமிலலே' என்று, மன்னிபபுககேட்கும பாவனே யில், கூறியது.

'நீஙகள பொயதான் சொல்லு கிறீாகள் நான இதைக கண்டிப பாய நமபவே மாட்டேன!'-என்ற வாறே, சிறிதும இரககமிலலாமல், படீரென, கதவை சாததிக கொண டது

அதாவது, பொழுது விடிநதுவிட்ட தால், அலலி மலா மூடிக கொணடு விட்டது.

'ஹோ ஹோ!'-என்று பெருமாள், பெரியதாய சிரிததாா 'என்ன, தேவீ! பாாத்தாயா, அநதப பெண நணடு செய்ததை! தீர ஆலோசிக காமல், இபபடியுமா ஒருததி, கண வனுக்குத் தணடனே கொடுபபாள? இனி, எபபோது கதவு திறககுமோ? தேவியின அருள கிட்டுமோ? அது வரை, தபஸ செயயணும, பாவம, ஆண நணடு. என்ன செயவது? பெண ணரசு நாடாயிறறே! அலலி ராஜயம. ஆண அரசாயிருநதாலாவது, நீதி கேட்கலாம், கிடைக்கும!' என்று, பெருமாள, வேண்டுமெனறே, நாசசி யாரைச சீணடினுர், குறும்பாக நகைத்துக கொணடே.

'இதைபபோய தணடனே என்பாா களா? இதுதான ஊடல, சுவாமி! ஊடல இலலாத வாழ்ககை, அவவள வாக இனிககாதே!'

'எதறகும அளவு வேண்டும. சீக கிரம, இநதமபதியரை சேர்த்து வைத்து விடு.' எனருா பெருமாள்.

'இனறு சாயநதிரம, அல்லி மலா மலாநததும், இருவரும, ஊடல நீங்கிக கூடிவிடுவாாகள்!' - என்ற படியே அவர்களேத் தன் கருணேக கணகளால், கடாட்சித்துவிட்டு,சென றனா. ஹரி பகதியுள்ள குழநதை பிறக்குமாறு அருளினுாகள.

இதையெலலாம பார்ததுக் கொணடேயிருந்த திருமஙகையாழ் வார், 'என்னே, உன அருள! என்னே உன் லீலேகள'-என்று பகதிப் பரவசததோடு, பாசுரம பாடினுா.

'' வளளிக் கொழுநன முதலாய
மககளோடு முக்கணனை
வெளகியோட விறலவாணனை வியந
தோள் வனத்தைத்துணித்துகந்தான
பளளி கமலததிடைபபட்ட பகுவாயல
வன முகம நோககி
நனனியூடுமே வயல சூழ்ந்த நறையூா
நினற நமபியே''



## பெருமாள் கோயிலுக்குச் செல்லும்போது

திருமதி. ஜெயந்தி ராஜகோபாலன-நெய்வேலி.

கோயிலுககுச சென்றதும துவஜஸதமபம் முன சாஷ்டாஙக மாக விழுநது சேவிக்க வேண்டும

அடுத்ததாக துவாரபாலகாகளே வணஙகி ஆலயத்துககுள பிரவேசிக்க வேணடும.

பிறகு தாயார் சநநிதிககுச சென்று தாயாரை சேவிகக வேணடும.

பிரதான பெருமாள் சநநிதிககு எதிரில் உளள கருடாழ வாரை சேவிகக வேண்டும

அதன பிறகு பெருமாள் சநநிதிககுச சென்று பெருமாளே சேவிததுவிட்டு தீாததம, சடாரி, திருத்துழாய முதலியன பெறறுக கொளள வேண்டும.

பிறகு ஆலயததை நான்கு முறை பிரதக்ஷணம செயய வேணடும.

பிரதக்ஷணம செயயுமபோது 'ஓம நமோ நாராயணு' அல்லது இராம, இராம என்று ஜபிக்க வேணடும்

பிரதக்ஷணம் முடிந்தவுடன துவஜஸதமபததிறகு முன மறு படியும சேவித்து விட்டு வர வேணடும்.

உலகில் வாழும் மக்களில் பலர் பாமரரென்றும், பணக்காரரென்றும், அறிஞரென்றும், அறிவிலியென்றும் அலுவலர் என்றும் அமைச்சரென்றும் உள்ளனர். இவர்களில் சங்ககால மக்களுக்குயிருந்த இறைமை உணர்வு எத்தனை பேருக்கு உள்ளது? அப்போதிருந்த செழுமை நிலை இப்பொழுது காணப்படுகிறதா? அப்போதைய வாய்ப்பும் வசதியும் இப்போது கிட்டுகிறதா? இல்லையே? காரணம் என்ன என்பதையும், செழுமை நிலை பெறுதற்கு இறைமையுணர்வு எந்த அளவுக்குத் துணை புரிகிறது என்பதையும் இக்கட்டுரையின்கண் ஆராய்வோம்.

சங்ககால மக்கள் கடவுள் பக்தியோடு எதையும் தொடங்கி செய்து முடித்தார்கள். அதனால் வெற்றியும் பெற்றார்கள். மகிழ்வோடும், மனநிறைவோடும் வாழ்ந்தார்கள். மாநிலத்துக்கு வழிகாட்டியாகவும் விளங்கினார்கள்? ஆனால் இன்றோ எத்தனை பேர் இறைவனை எண்ணித் தொழில் செய்யத் தொடங்குகிறார்கள்? வெற்றி பெறுகிறார்கள்? இப்போது நடைபெறுகின்ற செயல்கள் எல்லாமே தற்காலம் கண்ணுக்குக் கவர்ச்சியாகத் தோன்றினாலும் உள்ளுக்குள் ஆராய்ந்து பார்த்தால் அத்தனையும் கால கட்டத்தில் சிறப்பிழந்து போகின்ற நிலையினையே காண்கின்றோம். கூறப்பட்டதில் இரண்டு வித கருத்துக்கள் இருக்க முடியாது. நுணுகி ஆராய்ந்து பார்த்திடில் உண்மை புலனாம்.

**இறைமை என்றால் என்ன?**

இறைமை என்றால் கடவுட்டன்மை என்பது பொருளாம். காண்கின்ற, உணர்கின்ற, அனுபவிக்கின்ற அனைத்திலுமே காணலாம்.

இறைமை மலைகளிலும், மாநதிகளிலும், மரங்களிலும், மான்களிலும், பச்சைக் கிளியிலும், உறுமும் மேகத்திலும் காணலாம் என சுவேதாஸ்வதர உபநிடதம் கூறுகிறது.

இதே கருத்தை அடிப்படையாகக் கொண்டு, இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞரென்றும், பாவேந்தரென்றும், புரட்சிக்கவிஞரென்றும் பாராட்டப்பெறுகின்ற பாரதிதாசன்,

'விரிந்த வானே வெளியே எங்கும்
விளைந்த பொருளின் முதலே
திரிந்த காற்றும் புனலும் மண்ணும்
செந்தீ யாவும் தந்தோய்!
தெரிந்த கதிரும் நிலவும் பலவாச்
செறிந்த உலகின் வித்தே
புரிந்த உன்றன் செயல்கள் எல்லாம்
புதுமை புதுமை புதுமை'

என்று பாடி

# இறைமை

வியக்கின்றான் இறைமையுணர்வைப் பெற்றுப் பிறர்க்குத் தருகின்றான். தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்களும் இயற்கைப்பொருள்களினூடே இறைமையைக் காண்கின்றார். இயற்கைப் பொருள்களைக் காண்கின்ற போதெல்லாம் இறைமையைக் கண்டு அனுபவிக்கின்றார் நம்மாழ்வார்.

விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை
பாதம்கைகள் கண்கள்
விட்டிலங்கு கருஞ்சுடர் மலையே
திருவுடம்பு
விட்டிலங்கு மதியம் சீர்சங்கு சக்கரம்
பரிதி
விட்டிலங்கு முடியம்மான
மதுசூதனன் தனக்கே
திருவாய்மொழி: 2.7.5

திரு. பொ திருஞானம் — வெங்கலம்

இறைவன் அருவமானவன். இயற்கையின் உருவங்களில் உள்ளான். அறிந்து உணர்ந்து கூறியவர்கள் அடியார்கள். தாமரை மலரைக் காண்கின்ற போது திருமாலின் பாதங்கள், கைகள் தெரிகின்றன. மலையினைக் காண்கின்ற போது திருமால் உடம்பு தெரிகின்றது. பிறைச் சந்திரனைக் காண்கின்ற போது திருமாலின் கையிலுள்ள வெண்சங்கு தெரிகிறது. கதிரவனைக் காண்கின்ற போது மதுசூதனின் சக்கரம் தெரிகிறது. இவ்வாறு இயற்கைப் பொருள்களில் இன்பங்கண்டு இறைமையை உணர்கின்றார்கள் ஆழ்வார்கள்; நமக்கும் உணர்த்துகின்றார்கள். திருமுருகாற்றுப் படை அருளிய நக்கீரர் பெருமானும் 'கடலில் எழும் கதிரவனைப் போன்றவனே' என்று இறைமையை அனுபவிக்கின்றார்.

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு
—திருமுருகாற்றுப்படை.

பாட்டுக்கொரு புலவன் பாரதி கூட, யாதுமாய் விளங்கும் இயற்கை தெய்வமே என்றுதான் இறைமையை விநாயகர் நான்மணிமாலையில் குறிப்பிடுகின்றார். நாச்சியார் திருமொழியில் கூட,

'காலை எழுந்திருந்து கரிய குருவிக
கணங்கள்
மாலின் வரவுசொல்லி மருள் பாடுதல்
மெய்ம்மை கொலோ'

என்று கூறப்படுவதை நோக்குங்கால் குருவியின் குரல் இறைமையினை ஏத்தும் பாட்டாக ஒலிக்கிறது.

'' எளியனேன் யானென்னை எப்போதும்
போக்கிடுவாய் இறைவனே? இவ்
வெளியிலே
பறவையிலே, மரத்தினிலே,
முகிலினிலே
வரம்பில் வான, வெளியிலே,
கடலிடையே
மண்ணகத்தே வீதியிலே
வீட்டிலெல்லாம்
களியிலே கோவிந்தா நின்னைக் கண்டு
நின்னோடு நான் கலப்ப தென்றோ? ''

என்று கோவிந்தன் பாடல்கூறுகிறது வெளியிலே, பறவையிலே, மரத்திலே, முகிலினிலே, இன்ன பிற இயற்கைப் பொருள்களிலே கோவிந்தன் இருப்ப

தாக உன்னும்போது அடியார்க்கு மகிழ்ச்சியன்றி வேறென்ன தோன்றும்?

"சென்றுநகு இன்பதுன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடு—அதுவே
வீடு வீடாமே"
—திருவாய்மொழி 8 8 6

என்ற அடிகளை ஆய்ந்து நோக்கின் இறைமையுணர்வு பெற்றால் மோட்சகதி அடைய முடியும் என்ற கருத்து உண்மையாகின்றதல்லவா?

"செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திடலாம் என்றே
எண்ணியிருப்பார்
பித்த மனிதர் அவர் சொல்லுஞ்
சாத்திரம்
பேயுரை யாமென்றிங்கு ஊதேடா
சங்கம்

இத்தரை மீதினிலே யிந்த நாளினில்
இப்பொழுதே முக்தி சேர்ந்திட நாடி
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவராம் என்றிங்கு ஊதேடா
சங்கம்"

என்று பாரதி பாடுகின்றான் இருக்கின்ற போது இறைவனை எண்ணாமல் இறந்தபின் எண்ணுவது இயலுமா?

"நினைனுள்ளேனுய பெற்ற நன்மை
இவ்வுலகினில் யார் பெறுவார்"

என்று பெரியாழ்வார் கேட்கின்ற போது நாமும் ஏன் நன்மைபெறக் கூடாது என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

இறைமையுணர்வு பெறுவதன் பயன்

"இம்மையில் இறையுணர்வு பெற்றால்,
சித்தந் தெளியும்—இங்கு
செய்கையனைத்திலும் செம்மை
பிறந்திடும்
வித்தைகள் சேரும்—நல்ல
வீரர் உறவு கிடைக்கும் மனத்திடைத்
தத்துவம் உண்டாம்—நெஞ்சில்
சஞ்சலம் நீங்கி உறுதி விளைந்திடும்"

என்ற பாரதியின் கருத்துப்படி பயன்கள் பல பெறலாம். இறைமையுணர்வு இல்லாதார் இதைப் படித்த பிறகாவது உணர்வார்களேயாயின் இக் கட்டுரையின் நோக்கம் வெற்றி பெற்றதாகும் வெறுமனே உண்டு களித்து, கழித்து வாழ்வது ஒரு வாழ்வா? விலங்குகளும் பறவையினங்களுமதான் உயிர் வாழ்கின்றன. ஆனால் இறையுணர்வு பெற பகுத்தறிவு (ஆறறிவு) இல்லை. ஆனால் மனிதனோ பகுத்தறிவிருந்தும் விலங்கினங்கட்குச் சமமாக வாழ்கின்றான் இந்நிலை விடுப் படித்தும், கேட்டும் இறையுணர்வு பெற்று வாழ்வினில் மேன்மை பெறுவார்களாக

கற்றதனாலாய பயனென்கொல்
நற்றாள் தொழாஅர் எனின்

பிறவிப்பெருங் கடனீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்



# மும்மதங்கள்

துவைதம், விசிஷ்டாத்வைதம் மற்றும் அத்வைதம் என்பன மும்மதங்களாகும்

ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டதல்ல ஒன்றையொன்று கண்டிக்கத் தக்கதல்ல. ஒன்றிலிருந்து ஒன்றிற்குச் செல்லலாம்.

துவைத்ததின் கூற்றுப்படி பரமாத்வாகிய கடவுளுடைய ஆன்ம ரூபமும், ஜீவாத்மாவாகிய ஒவ்வொரு உயிரின் உச்சாச சொரூபமும் தனித் தனியானது.

விசிஷ்டாத்வைதப்படி பரமாத்வாவும் ஜீவாத்மாவும் வெவ்வேறானாலும் ஜீவாத்மா பரமாத்விலுள் அடங்கும்

அத்வைதப்படி பரமாத்மா, ஜீவாத்மா என இரண்டில்லை இரண்டும் ஒன்றுதான் பரமாத்மாதான் ஜீவாத்மா ஆகிறது

உடம்பு நிலை துவைதம். உள்ளத்தின் நிலை விசிஷ்டாத்வைதம். இரண்டையும் அடக்கிய ஆத்ம நிலை அத்வைதம்.

இறைவனிடத்து பக்தி உள்ளவனுகி, தமதம் விளைகளைச் சரிவரச் செய்து, தம்மைச் சார்ந்தவர்களின் பசியினைப் போக்கி, தான தாமங்கள் செய்து வாழ்வதே துவைதமாகும்

முகத்தாளை சிரத்தையோடு பூசித்து, அவர்கள் சொற்படி காரியங்கள் ஆற்றுவதே விசிஷ்டாத்வைதமாகும்.

அனைத்து உயிர்களிடத்தும் அன்பு செலுத்தி தானுக் உணர்ந்து—அப்பால் அன்புடையவர்கள் அளிப்பதை மட்டும் பிரியமுடன் புசித்து, ஆத்மாவை அறிந்து வாழ்வதே அத்வைதமாகும்

துவைத நிலையிலிருந்து விசிஷ்டாத்வைத நிலைக்கு வர வேண்டுமென்றால் வேதங்களைப் படித்து, ஈசுவரனைத் தியானித்து - உலக விவகாரங்களில் ஈடுபட வேண்டும்

விசிஷ்டாத்வைதத்திலிருந்து அத்வைத நிலைக்குச் செல்ல வேண்டுமென்றால் வேதங்களிற் படித்தபடி தியானங்களைச் செய்து—ஞானங்களைப் பெற வேண்டும்

அத்வைதக் கொள்கைகளை ஸ்ரீ சங்கராச்சாரியார் சுவாமிகள் அவர்கள் பரவச் செய்தார்கள், விசிஷ்டாத்வைதத்தில் விருப்பு ஏற்படுத்தினார் ஸ்ரீ ராமானுஜசாரியார் அவர்கள். துவைதத்திலும் துன்பமற்றிருக்கலாம் என்றார் ஸ்ரீமத்வாச்சாரியார் அவர்கள் மூவரின் போதனைகளே மும்மதங்களாகும்.

ஆதாரம் திருவண்ணாமலை ஸ்ரீரமணதாசன் அவர்களின் பகவத் கீதை
தொகுப்பு கவிஞர் முடிவை. முத்து

" ஸெங்கசக்ரம ஸகிரீட குண்டலம
ஸபீதவஸதரம் ஸரஸீருஹே
க்ஷணம்
ஸஹாரவக்ஷ ஸதல கௌஸதுபாஸகம்
நமாமி விஷ்ணும் சிரஸா சதுர்
புஜம்."

இநத தியான ஸ்லோகம கொண்டு எம்பெருமானே தியானிககின்றோம். அதாவது சங்கு, சக்கரம, கிரீடம, குணடலம, மஞசள்மடி, தாமரைக் கண, மாலே, மார்பில் கௌஸதுபம, கொணடு நானகு திருக்கரங்களுடைய

வைஷ்ணவர்களுககு உரிய மகா மநதிரம் அஷடாட்சரமான 'ஓம நமோ நாராயணுய' எனபதாகும. சைவர்களுடைய (சைவ மதத்தவர்) (saivism) மகா மந்திரம ஓம் 'சிவாய நம' என்பதும, கௌமாரர்களுடைய (ஷண்முகனே வழிபடுபவர்) மந்திரம ஓம 'சரவணபவ' எனபதும் முறையே அவரவாகள் ஏற்றிக் கூறுவா. இநத அஷடாட்சர மநதிரமான 'ஓம் நமோ நாராயணுய' நம;' என்பதை மனஉருகி கூறினுலே

வராநினற இரகசியததிரயங்களான திருமந்திரம் ஆகும். இது பிரணவத துக்கு வியாக்கியானமென்றும் இதற்கு நான்கு வேதங்களும் வியாக கியானங்களாமென்றுங் கூறுவர். இம்மந்திரம் எட்டிழையாய் மூன்று பதமாயிருககின்றது. இந்த மூன்று பதங்களில் 'ஓம' என்ற பிரணவம் முதற்பதமாயும 'நம' என்பது இரண் டாவது பதமாயும் 'நாராயணுய' என்பது மூன்றுவது பதமாயுமிருப்ப தால் இந்த முறையாகவே இதனே உச்சரிக்க வேணடும்.

# விஷ்ணுவின் அஷ்டாட்சர விளக்கம்

பெருமானே உன் திருவடிக்கு நமஸ காரம என்பது இநத ஸ்லோகத்தின் பொருள். ஸ்ரீ ஆதிசஙகர ரால் ஸ்தாபனம் செய்யப்பட்ட ஷண மதங்களுள் மகோனனத நிலே பெற் றது 'வைஷ்ணவம்' ஆகும். இநத வைஷ்ணவத்தை ஸ்ரீ இராமானுஜர் விளக்கிக கூறுகின்றபோது விசிஷ் டாட்வைதம என்றே குறிப்பிடு கின்றார்.

அநித்தியமாகிய பிரபஞசத்தின் துணே கொணடு நித்திய வஸ்துவாகிய பரம புருஷனே நாம் அறிய வேண்டும் எப்படியெனில் மனம், மொழி, மெய யாகிய திரிகரணங்களுக்கும எட் டாத அதீதப் பொருளேத திரிகரணங் களின் துணே கொணடு தொழுதாக வேண்டும. அதன் பொருட்டே எம பெருமான் ஆலயத்தின் கண் அர்ச்சா வடிவத்தில் எழுநதருளப பெறு கிறான். புவியியல (பூகோளம) (Geography knowledge) கறகின்ற வாககு பட விளக்கம எவவளவு அவ சியமோ அவ்வளவு அவசியம் ஆலய வழிபாடு ஆகும். அதனுள் எம்பெரு மானுன ஸ்ரீமந் நாராயணனே எழுந தருளச் செய்து வணங்கி (தொழுது) நின்று, உருகி, நிற்பது, அதனினும் மேனமையாகும்.

எம்பெருமானின திருவருள கிட்டும் என்பது திண்ணமாகும

விஷ்ணுவின நிலே :

ஸ்ரீமன நாராயணன் ஒவவொரு திவ்ய தேசததிலும மூனறு வித கோலங்கொண்டு விளங்குகின்றான். நின்றனன், இருந்தனன், கிடந்தனன் என்றே ஆழ்வார்கள் புகழாரம் சூட்டுகின்றனர். நின்றது திருவேங கடம, இருந்தது திருநாங்கூர, கிடந ததது ஸ்ரீரெங்கம். இந்த மூனறு நிலே யிலும் காணப்படுகின்ற பெரு மானது திவய நாமமான 'நாராய ணன' என்ற சொல்லிற்கு பொருள யாதெனின் 'நாரா' என்றால் புருஷ னிடத்திருநது தோன்றிய பூதங்கள் முதலிய பிரபஞ்சப் பொருள்கள். 'அயனன்' என்றால் அமர்நதிருப் பவன். நார+அயனன்=நாராயணன். தன்னிடத்திலிருநது உணடான பிர பஞசம முழுதிலும் பரம புருஷன் அந்தர்யாமியாய் வீற்றிருக்கின்றான்; எனவே அவன நாராயணன.

அஷ்டாடசரததின உயரிய விளக்கம் :

ஓம் நமோ நாராயணுய என்னும திருவஷ்டாட்சரம் வைஷ்ணவர்கள் யாவர்க்கும் மூல மந்திரமாயுள்ளது. இது சகல வேத சார சங்கிரகமாகிய பிரம வித்தையென்று உபதேசித்து

'ஓம' என்பது ஓரட்சரம். 'நமோ' என்பது இரண்டு அடசரம, நாரா யணுய எனபது ஐந்து அட்சரம். ஆக இவ்வாறு எடடடசர்ங்களாகக கணக் கிட்டுச் சொலலுகையால பிரண வத்தை நீக்கி உச்சரித்தல் கூடாது. ஏனெனில் பிரணவத்தை நீககி அஷடாட்சரத்தைத் தனியே ஜபிகக விதியில்லே. அங்ஙனம் ஜபித்தால் அஷடாட்சரமென்பது கெட்டு சப் தாட்சரமாய் விடும். ஆகவே பிரண வத்தோடு சேர்த்து ஜபிபபதே மர பாகும.

திரு. S. நாராயணசுவாமி M A, B Ed,
திருஇன்னம்பூா.

பிரணவத்தின் விளக்கம் :

திரு அஷ்டாட்சரத்திலுள்ள பதம மூன்றனுள் ஓங்காரமாகிய முதற பதம மூன்று அட்சரமாயுள்ளது. அது 'அ' (அ) எனறும, 'உ' (உ) என் றும 'ம' (ம) எனறும சொலலப் படும். இவற்றுள் 'அ'காரமானது நாராயணனுடைய சகல ஜகத்கார ணத்வத்தையும், சர்வ ரக்ஷகத்வத் தையும், சமஸத கல்யாண குணத் மகததையும் சொலலுவதால் இவையே அகாராட்சரத்துக்குப் பொருளாகும.

இரண்டாவது அட்சரம் 'உ' காரமாகும். இதற்குப் பொருள் பிராட்டியென்று இராமாநுஜாசாரியர் கூறியிருக்க, உகாரத்தைப் பிராட்டிக்கு வாசகமாகச் சொல்லவொண்ணாதென்று அவரைப்பிள்ளை லோகாசாரியா மறுத்து உகாரத்துக்குத் தேற்றுகாரப் பொருளை யோதி அகாரவாச்சியனை நாராயணனுக்கே என்று அநந்நியசேஷத்வ நிவர்த்தியையும, சேஷத்வத்தையும பொருளாகச் சாதித்துள்ளார்.

மூன்றாவது அட்சரம் 'ம'காரமாகும். இதற்குப பொருள் இருபத்தைந்தாட்சரமாயும் ஞானானந்தமயமாயுமுள்ள ஆத்மாவாகும். இங்ஙனங்கூறிய அ—உ—ம, என்னும் மூன்று அட்சரங்களால் ஸ்ரீமந் நாராயணனுக்கே ஜீவாத்மாக்கள் அடிமையாயுள்ளார்களென்பது புலனாகிறது.

இனி இரண்டாம் பதமாகும் 'நம:' என்பது இரண்டட்சரமாயிருக்கின்றது. இது பிரணவத்தில் சொன்ன சேஷத்வத்தையே விரிததுக் கூறுகின்றது. அதாவது மகாரம் இருபத்தைந்தாவது மகாராட்சரமான ஆத்மாவை உணர்த்துகின்றது. நகரம தனக்கு உரியன அல்ல என்கின்ற நீக்கத்தை யுணர்த்துகினறது. எனவே 'நம:' வென்கிற பதம் யான் எனதென்னும் அகங்காரமமகாரமாகிய நிவர்த்தியையும் சுதநதிர ஹீனததையும் பாரதநதிர ஸ்வரூபத்தையும் விளக்குகின்றது.

இம் மந்திரததின் மூன்றாம் பதம் 'நாராயணாய' என்று சொல்லப்படும் 'நார'-'அயன'-ஆ என்று மூன்று விதமாகப பிரிக்கப்பட்டுள்ளது. இதில நாரமாவது சேதனாசேதனங்களுடைய நித்யத்தையும, அவற்றின சமூகததையும், நித்திய சூரிகளையும கூறுகின்றது. அயனமாவது இவைகளை ஆஸ்ரயமாக உடையவனென்று விளககுகினறது. ஆய வென்பது எல்லாவித கைங்கர்யங்களையும செய்ய வேணடுமெனறு கூறுகினறது.

இவ்வாறு திரு அஷ்டாட்சரததுக்குப்பொருள கூறப்படுவதால் திருமந்திராரததமாவது (ஓம) அகாரவாச்சியனை ஸ்ரீமந நாராயணனுககே உரியவனான நான, (நம:) எனககுரியனன்றி, (நார) சகல சேதனாசேதன வஸ்துக்களுக்கும் (அறிவுள்ளதும் இல்லாததும்), (அயன) ஆஸ்ரயனான நாராயணனுக்கே, (ஆய) எலலா கைங்கர்யங்களையுஞ் செயகின்றவனாகின்றேன. அன்றியும் பிரமன் முதல் எறும்பீராயுள்ள வெல்லாவுயிர்களுக்கும் ஸ்ரீமந நாராயணனே மாதாவாயும், பிதாவாயும், இருப்பிடமாயும், இரட்சகனாயும் சினேகனாயுமிருப்பதால் மோட்சத்துக்கு உபாயமும் அவனே, என்று உணரப் பெற்று அஷ்டாட்சரத்தால பெறக்கடவனவாய பகவானுக்கும் ஜீவர்களுககும் உள்ள நவ சம்பநதஙகளை முமுட்சு அறிதல் அத்தியாவசியமாம. அநத நவ சம்பநதங்களும் அஷ்டாட்சரததில் அடஙகியுள்ளன. இவ்வாறு கூறப்பட்ட நவசம்பந்தங்களை யுணர்நது எலபெருமானே மோட்சத்துக்கு உபாயம் என்று அறிய வேணடும்.

ஆழ்வாாகளின் விளக்கம :
நமமாழவாா :

இந்த அஷ்டாட்சரமான 'ஓம் நமோ நாராயணாய' என்றதற்கு நமமாழ்வார் கூறுகையில் திருவாய்மொழியில் எடுதத முதலடியாவது·

"உயர்வறவுயர் நலமுடையவன் எவனவன்,
மயர்வற மதிநலமருளினன் யவனவன்
அயர்வறு அமரர்கள் அதிபதி எவனவன
துயரறு சுடரடி தொழுது என மனனே"

இதனுள் விளக்கமாகக் கூறுகின்றார்.

திருமஙகையாழ்வார் :

அடுத்து திருமங்கையாழ்வார் தம் பாசுரத்தில் கூறுகிறபோது,

"வாடினேன் வாடி வருந்தினேன
மனத்தால பெருந்துயரிடும்பையில் பிறநது
கூடினேன கூடியிளையவா தமமோட வர் தரும கலவியே கருதி
ஓடினேனோடியுய்வதோர் பொருளாலுணர்வெனும பெருமபதநதெரிந்து
நாடினேன நாடிநான கண்டு கொணடேன 'நாராயணாவென்னும்' நாமம்

என அழகு படவும் அதன் ஸௌக்ஷுமத்தையும விளக்கினார் நமக்காக.

இம் மகோன்னத மநதிரமான அஷடாட்சரமானது ஸ்ரீ விஷ்ணுவின அஷ்டோத்ரம் சகஸ்ரநாமாவில் ॐ नारायणाय नमः என்றே விளம்புகிறது. காயதரி மநதிரததில் கூட 'ஓம் நாராயணாய வித்மஹே| வாஸுதேவாய தீமஹி தந்நோ விஷ்ணுப்ரஜோதயாத் | என்றே ரிஷிகளின் கூற்றாகும். ஆகவே நம்மையெல்லாம் உய்விக்க வந்தது 'நாராயணா' என்ற உயரிய சொல்லேயாகும். ★

## ஆபத்து விலக!

கடன், நோய், ஏழ்மை, தரித்திரம், பாவம், பசி, துர்மரணம், கோபம், பயம், கவலை முதலியவைகள் எப்பொழுதும் இல்லாமல் இருக்க கீழ்கண்ட சுலோகத்தை தினசரி மாலையில் 108 முறை ஜபிக்க வேண்டும்.

ருண ரோகாரி தாரித்ரிய
பாபக்ஷு தபவ் ருத்யவ:
பயக் ரோத மந: க்லேஸா:
நஸ்யந்து மம சர்வதா:

எடையூர் சிவமதி.

#  இந்து மதம் 

உலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் இன்பமும் துன்பமும் இயற்கையாகவே தோன்றுகின்றன. இப்பூவுலக இன்பங்களெல்லாம் நிலைபேறு இல்லாத சிற்றின்பமாகவே காட்சியளிக்கின்றன. அதன் காரணமாகவே சான்றோர்கள் பேரின்பத்தை அடைய முற்படுகிறார்கள். அவ்வாறு பேரின்பத்தை எய்த சான்றோர்கள் பூண்டொழுகும் வழிகளே மதங்களாகும்.

இன்றைய காலக்கட்டத்தில் மாந்தர்கள் பூண்டொழுகும் மதங்களில் இன்றியமையாதவை இந்துமதம், பௌத்தமதம், கிறிஸ்தவமதம், இஸ்லாம்மதம், யூதமதம் ஆகியனவாகும் இவற்றுள் இந்துமதம் சைவம் வைணவம், காணுபத்தியம், வைரம், கௌமாரம், வாமம் என்னும் கிளைகளையுடையது.

இந்திய மக்களின் மதமாதலால் இந்து மதம் என்று வழங்கப்படுகிறது என்று சிலர் கூறுகிறார்கள் ''சிந்து நதிக்கரையில் ஆரியர்கள் வசித்து வந்த காரணத்தால் அவர்கள் இந்துக்கள்' என்பபெயர் பெற்றனர் என்று சிலர் கூறுகின்றார்கள். எது உண்மையோ! ஆய்வுக்குரியது.

ஒருநாட்டின் பெயரினையோ, ஒரு ஆற்றின் பெயரினையோ இணைத்து விளங்குவது, இந்து மதமென்னின் தெய்வீகமதமாகிய இம்மதத்திற்கு இப்பெயர்பொருந்தாததொன்றாகும். இந்துக்களை சிலர் அஞ்ஞானிகள் என்றழைக்கின்றனர், அஞ்ஞானிகள் என்பதற்கு ஞானமில்லாதவர்கள் என்பது பொருள். இது தவறு. எவன் துன்பப்படுகிறானோ அவன் இந்து என்று அழைக்கப்படுகிறான் என்பதாகும்; அதாவது பிறவுயிர்கள் துன்பப்படுவதைக் கண்டு துன்பப்படுவனே இந்து என்பதாகும் ''எவ்வுயிரும் பராபரன்றன் சந்நிதியாகும், இயங்கும் உயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்'' எனக்கொண்டு எல்லா உயிரிடத்தும் அன்பு செலுத்த வேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்டு விளங்குவது இந்துமதம். அன்புவேறு கடவுள் வேறு என்பது அறிவிலார் சொல் ஆகும். அன்பே சிவம் (கடவுள்). எனவே இந்து மதம் என்பதற்குப் பொருள் அன்பு மதம் என்று பொருளாகும் என்று மகாவித்வான் திருவாளர் கே. ஆறுமுகநாவலர் கூறியுள்ளார்கள்.

இந்து மதம் மற்ற மதங்களுக்கெல்லாம் காலத்தால் முந்தியது. ''இப்பூவுலகிலுள்ள மத நூல்களில் மிகமுந்தினது இந்துமத ரிக்வேதமே'' என்பது பண்டிதர் மாக்ஸமுல்லர் கொள்கை. மற்ற மதங்கள் பலவும் அவ்வவ் மதங்களை தோற்றுவித்தவர் பெயரைக்கொண்டு விளங்க, இந்து மதத்தின் கிளை மதங்கள் ஒவ்வொன்றும் கடவுளின் பெயரைக் கொண்டு விளங்குகின்றன.

சிவம் என்னும் சொல்லுக்குப் 'பெருஞ்சுகம்' என்பது பொருள் எனக் கிறிஸ்தவ நூலாகிய தேம்பாவணியிலும் விளக்கப்படுகிறது. இன்னும் 'மங்களம்' 'நன்மை' எனவும் பொருள்கள் உண்டு. பக்தர்கள் முக்தி அடைவதற்கு ஏற்ற மதம் எங்கள் மதமே என யானைகண்ட குருடர் போல தாம் உணர்ந்ததே முடிந்த முடிவு எனக் கூச்சலிடாது, எப்பெயரைக் கொண்டு எங்கு நின்று வழிபடினும் அவை யனைத்தையும் இறைவன் ஏற்றுக் கொள்கிறான் என்ற ஒப்புடைமைக் கருத்தினை வெளியிடுகிறது.

'' யாதொரு தெய்வங் கொண்டீர்
அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக ஞர்தாம் வருவர்''
—சிவஞான சித்தியார்

பதி, பசு பாசம் என்ற முப்பொருள் உண்மையைக் கொண்டது. ஆண், பெண் தன்மையை இறைவனிடம் அர்த்தநாரீஸ்வரராகக் காட்டிப் பெண்மையை இகழாது உயர்த்திக் கூறுவது. ஆண்டான்-அடிமை அல்லது தாச மார்க்கம், தந்தை-மகன் அல்லது சத்புத்திரமார்க்கம், தோழன்-தோழன் அல்லது சகமார்க்கம், தலைவன்-தலைவி அல்லது சன்மார்க்கம் என்ற முறைகளில் கடவுள் வணக்கத்தை இயல்புக்கும் தகுதிக்கும் ஏற்ப உலகுக்கு வகுத்துக் காட்டுவது.

ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மல முறையை விளக்குவது இருபத்துநாலு தத்துவங்களோடு நிற்ப, இது முப்பத்தாறு தத்துவங்களை கொண்டு விளங்குவது. அருவ உருவ அருவுருவத் திருவுருவங்களாக இறைவனை வழிபடச் செய்வது. எல்லா மதங்களையும் அவற்றின் முடிவுகளையும் தன்னுள் அடக்கிக் காட்டி ஒரு மதத்தையும் இகழாமல் அவற்றிற்கு மேலும் திகழ்ந்து விளங்குவது.

திருக்கோயில் வழிபாடு, நித்திய கர்மம் முதலியவற்றால் உடலையும், உள்ளத்தையும் தூய்மையாக்கி மனது, வாக்கு காயத்தினையெல்லாம் கடவுள் வணக்கத்தில் ஈடுபடுத்தி மாந்தரை மயக்கத்தினின்றும் அகலச் செய்வது. முக்திநிலையை உலகியல். இல்லொழுக்கத்தோடு

புலவர். பொன். சுப்பிரமணியன்
எம.ஏ., பி எட்,
திருக்கண்ணபுரம்

இணைத்து மேற்செல்ல வழிக்காட்டுவது.

இல்லறத்தாலும், துறவறத்தாலும் இறைவனையடையலாம் என்று கூறுவது. மனிதர்களைக் கட்டுப்பாட்டிற்கு உட்படுத்தாது சுதந்திரத்துடன் இறைவனை வழிபடச்செய்வது. பகதன் முதல் திவ்விய ஞானிவரை தன் இதயத்தில் இருப்பதற்கு இடம் கொடுப்பது. பெரியோர் பிறப்பு அல்லது திரு அவதாரங்கள் என்றென்றைக்கும் உண்டு எனக் கூறுவது போன்றவைகள் இந்து மதத்தின் சிறப்பாகும்.

''ஓதுசமயஙகள் பொருள் உணரு
நூல்கள்
ஒன்றேடொனறு ஒவ்வாமல்
உளபலவும் இவற்றுள்
யாதுசமயம் பொருணூல யாதுஇஙகு
எனனில
இதுவாகும அது அல்லது எனும்
பிணக்கது இன்றி
நீதியினுல இவையெலலாம்
ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம
அதுசமயம் பொருணூல
ஆதலினுல் இவையெலலாம்
அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரணடும
அரனடிக்கீழ் அடங்கும்.
—சிவஞானசித்தியார்.

இவ்வாறு பல பெருமைகள் இந்து மதத்திற்கு இருக்கினறன. இப்பெருமைகளைப் பல பாதிரிமார்கள் நிறைந்திருந்த அமெரிக்க நாட்டில் சிக்காகோ சர்வமத மகாநாட்டில் நம்முடைய விவேகானநதர் அவர்கள் எடுத்துக் காட்டிய யோது ''உலகில் உயர்ந்த மதம் இந்துமதமே'' என அனைவரும் உணர்ந்தனர். அது பற்றிய கருத்துக்களைக் காண்போம்.

''நியூயார்க் தூதன்'' (New york Herald) என்ற இதழ் 'சர்வமத மகா சபையில் பேசியவர்களில் விவேகானந்தாரே மிகவும் சிறந்தவர் என்பதற்குச் சிறிதும் சநதேகமில்லை. அவர் பேசியதைக் கேட்டபிறகு 'இந்துக்களுக்கு உபதேசிக்க இங்கிருந்து பாதிரிமார்களை அனுப்புவது பெரும் முட்டாள்தனம்.' எனக் கூறியிருக்கிறது.

மற்றொரு பத்திரிகை (இதழ்) 'ஒவ்வொரு கிறித்தவசர்ச்சிலிருந்து பிஷப்புகளும் உபதேசிப்பவர்களும் இஙகு வருகை புரிந்தவர்களும் உண்டு. அவர்களெல்லோரும் விவேகானந்தரின் சொற்பொழிவின் வஜ்ராயுதத்தின் முன் நிற்க மாட்டாது விழுந்து விட்டார்கள்' என்று கூறுகிறது. இன்னும் பல பத்திரிகைகளும், தலைவர்களும், அறிஞர்களும் இந்துமதத்தையும், சுவாமிகளையும், புகழ்ந்து கொண்டாடினுர்கள். ஆயிரக்கணக்கான மேலைநாட்டார் இவருக்குத் தொணடர்களாகி இந்து மதத்தைப் பின்பற்றினுர்கள். இந்து மதத்தினுணமைகள் விவேகானநதரைப் போனற தகுதி உடையவர்களால் தக்க முறையில எடுத்துச் சொல்லப்படுமானுல இப்பூவுலக அறிஞரனைவரும் இந்துமதத்தையே மேறகொள்வார்கள என்பதற்குச் சநதேகமில்லை என பண்டிதவித்துவான் சமயப் பேரறிஞர் ஆறுமுக நாவலர் போன்றோர்கள் நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார்கள். இத்தகைய பெருமை வாய்ந்த இந்து மதத்தை தேசமெங்கும் எடுத்தோதி இக, பர இன்பங்களை பெறுவோமாக;



## மங்களமான பலன்கள் ஏற்பட!

பசுவை மூன்று முறை வலம் வந்து கீழ்க்கணட சுலோகத்தைக கூறி வணங்கினுல் மஙகளகரமான பலன்கள் நடக்கும்.

கவா மங்கேஷு திஷ்டந்தி
புவனுனி சதுர்தஸ
யஸ்மாத் தஸமாச் சிவம் மே
ஸயாத இஹலோகே பரத்ரதச.

## கடன் தொல்லை தீர!

தினசரி கீழ்கண்ட சுலோகத்தை 108 தடவை ஜபித்து வந்தால் கடன் தொல்லை நிச்சயம் விலகும்.

'' அங்காரஹ மஹீ புத்ர
பகவன் பகதவத்ஸல!
நமோஸ்துதே மமாஸேஷம்
ருணமாஸு விமோசய''

## விரைவில் திருமணம் நடக்க!

தினசரி கீழ்க்கணட சுலோகத்தை சொல்லி வந்தால் திருமணம் நடக்காமல் இருப்பவர்களுக்கு விரைவில் திருமணம் நடக்கும்.

கல்யாணுத்புத காத்ராய
காமிதார்த்தப பிரதாயினே
ஸ்ரீமத் வேங்கடநாதாய
ஸ்ரீனிவாசாய மஙகளம் ;

எடையூர் சிவமதி.

# கர்ம யோகம்

கர்த்தா பாவனை இல்லாது வினைப் பயனில் ஆசை வைக்காது ஆத்மனில் சித்தத்தை நிறுத்தி, பற்றற்றுத் தொழில் புரிவதே கர்மயோகம். கர்மயோகத்தின் அஸ்திவாரம் நிஷ்காம்ய சேவையே. பக்தியே சிறந்த சாதனம் என்றார் ஸ்ரீமத் ராமானுஜர். ஞானமே சிறந்தது என்றார் ஸ்ரீஆதி சங்கரர். ஆனால் பக்தியும் ஞானமும் பெற நல்ல கர்மாக்களைச் செய்து மனதை தூய்மை பெறச் செய்வது அவசியம் என்றனர் இருவரும்.

''செயலைச் செய் பலனைப்பற்றி கவலைப்படாதே அதற்கு நான் இருக்கிறேன்'' என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர் கீதையில். கர்மத்தை ஈஸ்வரப் பிரதியாகவும் பகவத் ஆக்ஞையாகவும் கருதி பலனைத் தியாகம் செய்து, பகவானுக்கு அர்ப்பணம் செய்தால் கர்மத்தின் பலன் அண்டாது. இது சாத்விகத்தியாகம்-நிஷ்காம்ய கர்மம் எனப்படும்.

கர்ம பலனைத் தியாகம் செய்கிறவன் கர்மயோகி. நிஷ்காம்ய கர்மத்தால் ஞானம் பிறந்து பகவானிடமும் பாகவதர்களிடமும் பக்தி உண்டாகும். யோக முறையே கர்மத்தை திறமையாகச் செய்யும் முறை. எந்த நிலையிலும் உள்ளத்தை சமத்துவ நிலையில் வைத்திருத்தல் யோகம். பயன் எதுவாயினும் லாபமோ, நஷ்டமோ, வெற்றியோ, தோல்வியோ, எதுவாயினும் சம நிலையில் ஏற்றுக்கொண்டு கர்மம் செய்பவன் கர்மயோகி. யோக நிலையில் முன்னேற கர்மம் கருவியாகும்.

அரை மனத்தோடு செய்யும் சேவை சேவையேயல்ல. சேவை செய்யும் போது இருதயம், மனது, ஆத்மா முழுவதையும் செலுத்துதல் அவசியம். மனதை கடவுளிடம் வைத்து கையால் வேலை செய்ய வேண்டும். நாம் நம்முடைய நோக்கங்களைப் பாகுபடுத்திப் பரிசோதித்துப் பார்க்க வேண்டும். பற்றற்ற சேவையே முக்தி மார்கத்திற்கு வழிகாட்டி.

வாழ்க்கையின் இறுதி லட்சியத்தை அடைகின்ற மார்க்கத்திலே முதல் படியாகத் திகழ்வது நிஷ்காம்ய கர்மம் அல்லது வாழ்க்கையின் கடமைகளைத் தன்னலமற்ற முறையில் செய்வதாகும். நிஷ்காம்ய கர்மம் பயிற்சியானது உள்ளத்தை தூய்மையாக்கித் தான்வேறு என்கிற தனிமை உணர்ச்சியை அழிக்கின்றது. சுயநலச் செயல் யோக முயற்சியாகாது. சிறிய உபகாரம் பிறருக்குச் செய்தாலும் எதையாவது அவர்களிடமிருந்து எதிர்பார்க்கிறது மனது. நாம் புன்னகை புரிந்தால் நம் நண்பனும் பதிலுக்குப் புன்னகை புரிய வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். ஒருவருக்கு ஒரு குவளை தண்ணீர் கொடுத்தால் கூட அதற்கு அவர் நன்றி கூறவேண்டும் என எதிர்பார்க்கிறோம்.

நியாயமான உற்சாகத்துடனும், மனோபாவத்துடனும் குப்பை எடுத்தல்கூட யோகப பணியாகும். தோட்டி கூட தன் நிலையிலேயே சேவையினால கடவுளை அடைய முடியும. ஒரு உண்மையான கர்மயோகி இழிந்த வேலையென்றும், கௌரவமான வேலையென்றும் யாதொரு வேற்றுமையையும பாராட்டமாட்டான.

மகாத்மா காந்தியடிகள் இழிவான வேலையென்றும், கௌரவமான வேலையென்றும் வேற்றுமையை ஒரு போதும பாராட்டவில்லை. கக்கூஸ் கழுவுவதும, குப்பை வாருவதும் அவருக்கு சிறந்த யோகம். கர்மயோகத்தின் சரியான பொருளை உணர்ந்தவன் எந்த வேலையையும் யோகக்கிரியையாகவும் பகவதாராதனையாகவும் கொள்வான். அவன் திருஷ்டியில் இழிவான வேலையே யில்லை. ஒவ்வொரு வேலையும் நாராயணனுக்குப் பூசையே. கர்மயோகத்தின்படி எல்லாச் செயல்களும் புனிதமானவையே.

மனித வாழ்க்கை சுய நலனுக்காக ஏற்பட்டதல்ல. பிறருக்கு அர்ப்பணம் செய்வதற்காகவே. பற்றற்றுத் தொழில் புரிவதே மேலான லட்சியம். இந்த லட்சியத்தில் ஏனைய லட்சியங்கள் அடங்கியுள்ளன. அன்புடன் ஆற்றும் பணியே ஈஸ்வர ஆராதனை. ஞானத்துடன் கர்மமும் வேண்டும் என்கிறது பிரம்ம சூத்திரம். ''உலக நன்மைக்கும், மற்றவர்களுக்கு உதாரணமாகவும் நானே கர்மம் செய்கிறேன்'' என்கிறார் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா.

''சுய நலத்துடன் உன் முக்திக்குப் பாடுபட்டால் நீ சித்தியடைய மாட்டாய், மற்றவர் விடுதலைக்காகப் பாடுபடு'' என்கிறார் ஸ்வாமி விவேகானந்தர்.

தென்னாறு ஜி. ராமநாதன் பி.ஏ.,

கர்மயோகத்தில் பலனைத் தியாகம் செய்வதால் ஞானம் ஏற்படுகிறது. மனித சமூகத்திற்கு முக்கியமாக வியாதியால் அவதிப்படுபவர்களுக்குச் சேவை செய்வதே ஆண்டவனுக்கு உகந்த கைங்கர்யம் ஆகும். வாழ்க்கையின் இரகசியம் ஆண்டவனை உண்மையாக நேசிப்பதும் பற்றற்று சேவை செய்வதுமேயாம்.

தன்னைத் தான உணர்வதற்குப் பிறர் நலங்கருதி தொண்டு புரிவது ஒரு வழி ஆகும். இதுவும் முக்தி அடைவதற்கு ஒரு நெறி. கருமத்தின் நோக்கமும் ஆன்ம ஞானம் அடைவதாகே. ஞானத்தினாலும், பக்தியினாலும அடைகின்ற பேறு பிறர் நலங்கருதிய கருமத்தினாலும் பெறப் படும்.

ஜனகர் ஒரு அலாதி புருஷர். கர்ம வாள், ஞானவாள் ஆகிய இரண்டு வாள்களையும் அவர் ஏந்தியிருந்தார். பிரம்ம ஞானத்தில் அவர் பரிபூரணர். அத்துடன் உலகக் கடமைகளையும் முறையாக அவர் செய்து வந்தார்.

அவரவர் கர்மத்தை பற்றற்று செய்ய வேண்டும். கர்மத்தை மனிதன் நீத்துவிட முடியாது. கர்மத்துக்கு தான் கர்த்தா என்னும் எண்ணத்தை நீத்துவிட வேண்டும். அப்படி செய்கின்றவனே தியாகியாகின்றான்.

முதலில் மனதை அடக்கி ஆத்மாவை அனுஸந்தனம் செய்ய முடியாத நிலையில் கர்மானுஷ்டானம் செய்ய வேண்டியது அவசியம். இந்நிலையில் மனம் சித்த சுத்தி அடைந்த பின்னர் தியானம், யோகம் எல்லாம் கை கூடுகிறது. முதலில் கர்மா, அப்புறம் பக்தி. முடிவில ஞானம்.

“பறறற்றவனுக்கு வினைப்பயன் இல்லை. சுயலாபம் கருதிச் செய்யும் வேலை எல்லா வகையான பந்தங்களுக்கும் காரணம்” என்று சங்கரர் கூறுகிறார்.

தன்னுடைய சொந்த வேலையாயினும,பொது வேலையாயினும் விருப்பு வெறுப்பறறுத் தன்னலங்கருதாது செய்ய வேண்டும். எப்பொழுதும் நோககங்களை ஆராயந்து பார்க்க வேண்டும். நோக்கம் தூய்மையாக இருக்கவேணடும.

“உன்னுடைய செயல்களின் பலன்களைப்பற்றி கவலைப் படாதே, அதனால் சோம்பலுக்கோ, செயலற்ற நிலைக்கோ இடம் கொடுக்காமலிரு. மக்களுக்கும், நாட்டுக்கும்' சேவை செய்வதற்காக உன் ஆற்றலைச் செலவிடு. தன்னலமற்ற தொண்டில முழு மனதோடும், ஆற்றலோடும் மூழ்கிவிடு”, எனகிறார் ஸ்வாமி சிவானநதர்

“கர்மத்தைத் துறப்பதும், கர்மயோகமும் மிக உயாநத பேரின்பத்திற்கு அழைத்துச் செல்லும்; இவை இரண்டில் கர்மயோகம், கர்மத்தை துறப்பதை விட உண்மையில் மேலானது” என்கிறார் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான்.

# தயாசதகத்தில்.....

திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி-தேவகோட்டை.

உயர்வற உயர்நலமுடைய திருவேங்கட நாதனைப் பாடிப் பரவிய ஆசார்யர், ஆழ்வார் பல்லோர். அவனது கல்யாண குணங்களில் ஈடுபட்டு அவர்கள் நமக்களித்த அருளிச் செயல்கள பல. அவனது தயை, ஞானம், பலம், ஐஸ்வர்யம், வீர்யம், சக்தி ஆகிய குணங்களில் ஸ்ரீ தேசிகனை மிகவும் ஈர்த்தது தயையே. தயையை—கருணையை, பிராட்டியாக உருவகபபடுத்தி அதி அற்புதமான கவிதையை 108 சுலோகங்களில் நமக்குப் பெருநிதியென அளித்துள்ளார்.

நம்மைப் பரவசப் படுத்தும் சுவைமிக்க காட்சியை, முதல் ஸ்லோகத்திலேயே நமக்களிக்கிறார். கருணை, கருப்பஞ்சாறுகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. இச்சுவைமிக்க சாறு, உறைந்து அடியார்க்கு இனிய கற்கண்டு மலையாக, திருவேங்கடமலை அமைந்துள்ளது. கருணை, மலைபோல் அசைக்க முடியாதது. திருவேங்கடமலையே நமக்கு கற்கண்டு மலை என்ற இக்கவியின் கற்பனைத் திறன்தான என்னே!

மெய் மறக்கச் செய்யும் மற்றொரு காட்சியைக காணீர். ஸ்ரீநிவாஸனின் தயை,பெரும் நீர் நிலையெனப் பொங்கிப் பெருக் கெடுக்கிறது. நீர் பெருக்கெடுத்தால் வடிகால் வேண்டும் தானே? ஆசாரய பரம்பரையே வழிந்தோடும் நீர் பெருக்கு. ஆகா அதி அற்புதக் காட்சி. எம்பெருமானின் கருணையை நமக்களிப்பவர் ஆசார்யர்களன்றோ? இந நீர் பெருக்கில் இறங்கி, மூழ்கி நம் தாபம் தீரத்துடிக்கிறோம். அதறகு இறங்கு துறை இல்லாவிடின், இது எங்ஙனம் கைகூடும. ஆசார்யர் ஒவ்வொருவரும் ஒரு இறங்கு துறையாய் உளளனர். அவர்களது அருளிச் செயலின் துணை கொண்டு, இறங்கு துறையில் நீராடி மகிழ்வோம் வாரீர்!

பூமிக்கு அடியில் புதையல் இருக்கிறது. ஆனால் அதனை மாந்தர் அறிய முடிவதில்லை. புதையலைக் காண விரும்புவோர் மையிட்டுப் பார்த்தே தெரிந்து கொள்வர். ஸ்ரீ நிவாஸனின் தயை என்னும் புதையல் நமக்காகக் காத்திருக்கிறது. அதனைக் காண திருவேங்கட மலையை நமக்கு மையாகத் துணை புரிகிறது. ஏனெனில் அம்மலைக்கு அஞ்ஜன மலையென ஓர் பெயருமுண்டு. அஞ்ஜனமெனறால் மைதானே? சேதநர்கள் ப்ரபத்தியின் மூலம் அறம், பொருள், இன்பம், வீடு எனும் நாலவகைப் பயனையும் புதையலாகப் பெறுகின்றனர்.

யாவற்றிற்கும் சிகரமான வேறொரு காட்சி. தயாதேவிப் பிராட்டியார் ஸ்ரீ நிவாஸனின் பட்ட மகிஷியன்றோ! சேதநாகளைக் கடாக்ஷிக்க அவள வருமபோது, முன்னே ஞானம், தீபம் காட்டி ஜய ஜய எனக் கட்டியம் கூறி வருகிறது. அத்தேவிக்குப்பின் எம்பெருமானின ஏனைய குணங்களான பலம், ஐஸ்வர்யம், வீர்யம், சக்தி, ஆகியவை வருகின்றன. எம்பெருமானையே வசப்படுத்திய பெருமிதம் பிராட்டியின திருமுகத்தில் பொலிகின்றது. அவளது கடாக்ஷம் பெறும் நம் பாக்கியமே பாக்கியம்!

நம்மாழ்வார் தம் இறையனுப வங்களை நம்மோடு பகிர்ந்துகொள் ளும் வண்ணம் நிறையப் பாசுரங்கள் பாடியவர். திருவாய்மொழிப் பாசு ரங்களில் ஆழ்வாருடைய சுய அனுப வங்கள் குரல் கொடுப்பதைக் கேட்க லாம். அவற்றின் ஒரு தனிச்சிறப்பு சடகோபருடைய சொல்லில் விளங் கும் உறுதிப்பாடே ஆகும். சந்தேகங் களுக்கு இலக்கு ஆன மனிதர்கள் எளிதில் நம்பி எதையும் ஏற்றுக் கொள்ளமாட்டார். அத்தகைய பத் திரும்பத் தம் கண் எதிரே எம் பெருமானைத் தரிசித்து மகிழ்கிறார். நம் கண் எதிரே தெரிவதால, அந்த அளவுக்குச் சிறியவரா கடவுள்? அதுவும் அல்ல. அவர் பெயரே மகா விஷ்ணு.நெடுக வியாபித்து நிறைந்து நிறபவா திருமால் மறுபடியும், அவரே பரமசூட்சுமப் பரம்பொரு ளாகவும் திகழ்கிறா. ஏழு சுரங்கள் கொண்ட நம் இசையாவும் அவரது புகழ பாடுவனதான்.

வண்ணம் நிறைநத உயாந்த மணி மாடங்கள் சூழ்ந்த திருப்போ நக திருவனந்தையிலும்இறைத்தொண்டு செய்யலாம் என்கிறது திருவாய் மொழிப்பாசுரம்—

ஊரும் புடகொடியும் அஃதே
உலகெல்லாம் உண்டுமிழ்ந்தான்
சேரும் தண் அனந்தபுரம் சிக்கெனப்
புகுதிராகில்
தீரும்நோய் வினைகள் எல்லாம்
திண்ண நாம் அறியச்சொன்னோம்
பேருமஓர் ஆயிரத்துள் ஒன்று
நீர் பேசுமினே

# சொல்லில் உறுதி சடகோபர்

பிரகிருதிகளை மனத்தில் கொண்டு ஆழவார் அநேக விஷயங்களை உறுதி யாக எடுத்தியமபுவாா.

எடுத்துக்காட்டாக, அவருடைய கண்ணன் கழல் இணை யெனும் பாட லைப் பார்க்கலாம்.

கண்ணன் கழல் இணை நண்ணும்
மனம உடையீர்
எண்ணும் திருநாமம திண்ணம்
நாரணமே

இங்கு நாராயணத் திருநாமத்தின் பெருமையினைக் கூறும் ஆழவார் திண்ணம நாரணமே எனறு மொழி கிறார். கிருஷ்ண பரமாத்மாவின் திருவடி அடையும வழி, நாராயண நாமத்தை ஓதி வருதலே. இதுதான இப்பாடலின கருத்து இஙகு நம மாழ்வாா திண்ணம் என்பது தம் மன உறுதியை நமமோடு பகிாந்துகொள ளவே.

திணணம எனற சொல்லை வேறு இடஙகளிலும ஆழவாா ஆள்வார்.

திருமாலிருஞ்சோலை மலை பற்றிய திருவாயமொழிப பாசுரம் எமபெரு மானது அருளதிறத்தை வியநது புகழும்,

இறைவன், பார்வையில் புகுந்து அகலாது நிறகிறா. ஆழவாா திரும் ரத்து ஈசன இனறே என் மனத்துள் புகுநது நிறைந்து விளங்குகிறார் என் பது இப்பாசுரம.

கண்ணுள் நினறகலான கருத்தின்
கண் பெரியன்
எண்ணில் நுண்பொருள்
ஏழிசையின் சுவைதானே
வண்ண நன் மணிமாடங்கள்
சூழ் திருபபேரான்
திண்ணம் என் மனத்துப்
புகுந்தான் செறிந் தின்றே.

இங்கு இறுதி அடியில் திண்ணம் என்ற சொல் வருகிறது. சந்தேகத் திற்கு இடம் இன்றி, இன்றே என் உளளத்தே புகுநது நிறைந்துளளார் எனபெருமான். இது திண்ணம! உள்ளத்தின ஓர் ஓரத்திலே ஏதோ கொஞ்சம இடம பெறறு இறைவன் இருககவிலலை. செறிநது உளளாா. முழு உளளத்தையும் அடைதநுக் கொணடு, நிரப்பி நிற்கின்றார் என பது ஆழ்வாா அனுபூதி.

சடகோபா திருவனந்தபுரத்துப் பத்மநாபனின் சேவையைப் பாடு வார். திருவனந்தையில் எம்பெரு மானுக்குத் தொண்டு செய்தல் ஓர் அரிய பேறு என்பார் அவர். வைகுந் தத்தில் சேவை செய்கிறப் போலவே கருடப்பறவை மீது செல்லும், கருடக்கொடியுடையானை - முன்பு பிரளய காலத்தே சகல ஜீவராசிகளைக் காத்தற்பொருட்டு உலகத்தையே விழுங்கிப் பின் வெள்ளம் முடிந்த தும் வெளியே உமிழ்ந்த எம்பெரு மானைத் திருவனந்தபுரம் சென்று சிக்கெனப் பற்றிக்கொள்ளவேண்டும் என யோசனை கூறுகிறார் நம்மாழ் வார்.

அப்படிப் பறறிக்கொண்டால், ஒரு குறையும் நமக்கு இராது. கொடிய நோய்கள் யாவும் குணமாகும். தீராத வினைகள அனைததும் தீர்ந்துபோகும்.

திரு. ர. வேங்கடரத்னம்-நெய்வேலி.

அந்த எமபெருமானுக்கோ ஆயிரம் பேர் உண்டு.ஒனறலல, இரண்டல்ல — சுளையாக ஆயிரம் திருநாமங்கள அவற்றில் ஒன்றேனும் ஓதிவரலாமே.

இவவிடத்தில் இடையில், சந் தேகப் பிரகிருதிகளுக்கென ஆழ்வார் உறுதி தருவார்—திண்ண நாம் அறி யச் சொனனோம.

நாம் முறறும் உறுதியாக உணர்ந்து சொல்கிற வார்ததை இது!

திரும்ப, இரண்டு பாடல்களைக் கடந் தால், இதே வாக்கியம் வருகிறது.

புண்ணியம் செய்து நல்ல புனலொடு
மலர்கள் தூவி
எண்ணுமின் எந்தைநாமம்
இப்பிறப்பறுக்கும் அப்பால்
திண்ணம் நாம் அறியச் சொன்னோம்
செறிபொழில் அனந்தபுரத்து
அண்ணலார் கமலபாதம் அணுகுவார்
அமரர் ஆவார்

தூய நீரினால் திருமஞ்சனம் செய்வித்து, மலர்களினால் அர்ச்சனை செய்து, ஐயன் திருநாமத்தை நினைவிற்கொண்டு வழிபடின், இனிப் பிறப்பு இராது. ஆம், இதற்கு நல்ல புண்ணியம் செய்திருக்கவேண்டும். நல்ல பூந்தோட்டங்களும் தோப்புகளும் நிறைந்த திருவனந்தபுரத்துப் பத்மநாப பெருமானின் திருவடித் தாமரைகளைச் சேவித்தால், அமர நிலை எய்தலாம்.

ஐயம் அழிவிற்கு வழி. 'சம்சயாத்மா வினச்யதி' என்பது கீதாசாரியன் திருவாக்கு. அழிவு இல்லா அமர நிலை எய்துதற்கு வழி இதோ நாம், உறுதியாகத் தெரிந்துகொண்டு சொல்கிறோம். திண்ணம் இது என அறிந்து சொன்னோம் என்கிறார் சடகோபர்!(இங்கே, எண்ணும் இன் எந்தை நாமம் எனவும் பிரிக்கலாம் இனிய எம்பெருமான் திருநாமத்தை எண்ணுக)

இதற்கெல்லாம் முன்னோடியாக ஒரு திருப்பாசுரம் திருவாய் மொழியில் வரும். சடகோபர், இறைவன் பால் இதயத்தைப் பறிகொடுத்த தன்பெண்ணைத் தாயாக இருந்து பாடுகிறார். பெண்ணுக்கு உலகமே கண்ணனாகத் தெரிகிறது சர்வம் விஷ்ணுமயம் ஜகத் என்ற பேருணர்வில் திளைக்கிறாள் பக்தை

உண்ணுஞ்சோறு பருகுநீர்
தின்னும் வெற்றிலையும் எல்லாம்
கண்ணன், எம்பெருமான்
என்றென்றே கண்கள் நீர் மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளம்
மிக்கவனூர் வினவி
திண்ணம் என் இளமான புகும்
ஊர் திருக்கோளூரே.

இங்கும் ஒரு 'திண்ணம்'! திருக்கோளூர் எனும் திவ்விய தேசத்து எம்பெருமானிடம் இதயத்தைச் செலுத்திய இள நங்கை, அத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள அண்ணலை அடையப்போவது உறுதி. ஐயனை அடைவதில் உறுதி இருப்பின், திண்ணம அடையலாம் என்று அறுதியிட்டு ஆழ்வார் கூறுதலைக் காண்கிறோம்.






என் அருமைச சிறுவர்களே! நாம் எண்ணும் எண்ணங்களும், கூறும் சொற்களும், செய்யும் செயல்களும் பாவம், புண்ணியம் என்னும் இரு பிரிவுகளுள் அடங்கும். இவற்றைத் தமிழில் மறம், அறம் என்று கூறுவர். அற நூல்களில் விதித்தவற்றைச் செய்வது அறமாகும்; விலக்கியவற்றைச் செய்வது மறமாகும். அறச் செயல்களால நமக்கும் பிறர்க்கும் நன்மை விளையும். மறச் செயல்களால் விளைவன பொறுக்க முடியாத தீமைகளாகும்.

நன்மைகள் நமக்கு இனியன வாகும். தீமைகளோ இன்னாதன

திரு ஆர். கோபாலன்—சித்தூர்

வாகும். ஆகவே இனிமையை விரும்பும் நாம் அறச செயல்களையே மேற்கொள்ள வேண்டும்.

எவ்வளவு விழிப்போடிருந்தாலும் நமக்குத் தெரியாமலே சில சமயங்களில் நாம் பாவச் செயல்களைப் புரிந்துவிட்டுப் பின்பு பச்சாத்தாபம் அடைகின்றோம். "இப்பாவத்திலிருந்து தப்ப நமக்கு வழியில்லையா?" என்று ஏங்குகின்றோம். நம்முடைய ஏக்கத்தைப் போக்க அறநூல்களே நமக்குத் துணை புரிகின்றன. பல வகையான பாவங்களுக்கும் அறநூல்களே பரிகாரங்களும் கூறுகின்றன.

# பாவிக்கும் பரமபதம்

ஆனால் திருவள்ளுவர்,

"எந்நன்றி கொன்றார்க்கும உய்வுண்டாம உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்னும் குறளில எந்தப பாவத்திற்கும் கழுவாய உண்டு. ஆனால் ஒருவன் தனக்குச் செய்த நன்மையை மறப்பவனுக்குக் கழுவாயே இல்லை என்று கூறுகின்றார். இதனாலேயே யாராவது நமக்கு ஒரு தீமை செய்தால் அவர்களை நன்றி கெட்டவர்கள் என்று கூறுகின்றோம். பாவங்கள் யாவற்றினும் மிகக் கொடிய பாவம் நன்றி மறத்தலாகும் என்பதை வலியுறுத்தவே திருவள்ளுவர் இங்ஙனம் கூறினார்.

ஆனால் நன்றி கொன்ற பாவத்திற்கும் நாரணனின் திருநாமம் பரிகாரமாகும் என்று நம்முடைய இதிகாசங்கள் கூறுகின்றன.

கான்யகுப்ஜம் என்னும் நகரத்தில் அஜாமிளன் என்று ஒரு அந்தணன் இருந்தான். அவன் நற்பண்புகள் நிறைந்தவன்; முன்னோர் வகுத்த அறவழியில் ஒழுகிவந்தான். ஒரு நாள அவன் தந்தை அவனைத் தருப்பையும், விறகும் கொண்டு வரச் சொன்னார். அஜாமிளனும் அவற்றைக் கொண்டுவரக் காட்டிற்குச் சென்றான்.

அக்காட்டில் ஒழுக்கம் கெட்ட பெண் ஒருத்தி இருந்தாள். அவள அஜாமிளனைப் பலவாறு மயக்கித் தன் வயமாக்கிக் கொண்டாள. அஜாமிளனும் தான் வந்த காரியத்தையும் தன் தந்தையின் கட்டளையையும் மறந்தான். அக்கொடியவளின் மயக்கில் சிக்குண்டு அறவழியி

## அசுரர்கள் வழிபட்டுப் பேறு பெற்ற முக்கியமான சிவாலயங்கள்

| | | |
|---|---|---|
| 1. | இடும்பன் | — இடும்பாவனம், கன்றாப்பூர். |
| 2. | ஓணன் | ஓணகாந்தன் தளி (காஞ்சிபுரம்) |
| 3. | காந்தன் | ஓணகாந்தன் தளி (காஞ்சிபுரம்) |
| 4. | சலந்தரன் | ஓணகாந்தன் தளி (காஞ்சிபுரம்) |
| 5. | கரன் | — கற்குடி. |
| 6. | திரிசிரன் | — திரிசிராப்பள்ளி. |
| 7. | தூஷணன் | — திருவெறும்பியூர். |
| 8. | மாலியவான் | — கேதீச்சுரம் (இலங்கை). |
| 9 | வக்ரன் | — திருவக்கரை. |
| 10. | வெஞ்சன் | — வெஞ்சமாக்கூடல. |

—கமலவேணி தனபதி.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

## இதிஹாஸத்தில் பெண்களின் வார்த்தைகள்

| | |
|---|---|
| பெண்களின் வார்த்தையைக் கேட்டு கெட்டவர்கள் | கைகேயி—தசரதன (வரம்)<br>ஸீதை—ஸ்ரீராமர் (மாயமான்) |
| பெண்களின் வார்த்தையைக் கேளாமல் கெட்டவர்கள் | தாரா—வாலி<br>மண்டோதரி-இராவணன. |

## பெண்களின் தலையில் கைவைத்து அழிந்தவர்கள்

துச்சாதனன, கீசகன் — த்ரௌபதி தலைமயிரை இழுத்தார்கள்.
கம்சன் — தேவகி தலை மயிரை இழுத்தான்.

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான.

விருந்து தவறினன். அவளுக்கு அடிமையாகிச செய்யத்தகாத பல தீய செயலகளைப புரிந்து வந்தான.

சிறுவர்களே! நல்லவர்களும மன வுறுதி குலைந்தால மீளாத் துயருககு இலககாவாாகள். நல்லவனன அஜாமிளன மனத்தைத் தளர விட்டதனல் ஒழுககமகெட்டு, உயர் வழிநது ஆனறோா இகழும்படியான அவல நிலையை அடைந்தான. தனக்கு ஏற்பட்ட விழசசியைச் சிறிதும் உணராமல கண்டதே காட்சி, கொணடதே கோலம் என்று வாழந்து வந்தான்.

''தலையின இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின இழிநதக் கடை''

என்னும் வள்ளுவரின் வாய் மொழி எவ்வுளவு உண்மையானது என்பதை நாம் எணணிப் பார்க்க வேணடும்.

அஜாமிளனுக்குப் பல பிள்ளைகள் பிறந்தனர். அஜாமிளன தன் கடைசிப் பிள்ளையிடம் மிகவும் பாசம் வைத்திருந்தான். அவனுக்கு நாராயணன் என்று பெயா வைத்து விளடிக்கு ஒரு முறை நாராயணு! நாராயணு!! என்று அவனை அழைப்பதில் அஜாமிளன் தனி இன்பம் கண்டு வந்தான்.

அஜாமிளனுடைய ஆயுட்காலம் முடிவடையும் நேரம் வந்தது. கண டார் நடுங்கும்படியான தோற்ற முடைய எமதூதர்கள் பாசக் கயிற்றுடன் வந்து அஜாமிளன எதிரில் நின்றூர்கள். அவர்களைக் கண்ட அஜாமிளன் அச்சத்தால் நடுக்க முற்று தன் பேரன்பிற்குரிய கடைசிப் பிளளையை நாராயணு! நாராயணு!! என்று உரக்கக் கூவியழைத்தான. எமதூதர்களோ அவன் உயிரைப் பாசக்கயிற்றல கட்டி இழுககத் தொடங்கினர்கள். அப பொழுது திடீரென்று திருமாலின் தூதாகள் எமதூதர்களில் எதிரில் தோன்றி அஜாமிளனை விட்டுவிடுமாறு பணித்தனர்.

அப்பொழுது எமதூதர்கள் திருமாலின் தூதாகளை வணங்கி கிழவருமாறு முறையிட்டனர்.

''ஐயன்மீர்! இந்த அஜாமிளன பாவங்களின் உறைவிடமாக உலகில் வாழ்ந்து வந்தான். இவன் செயயாத பாவமே உலகில் இலலை என்று கூறுமளவிற்குப் பல பாவங்களைப் புரிநதுள்ளான். ஆதலால் இவனை மீளா நரகில் தள்ளுமபடி எமது இறைவனுகிய எமதருமன் எங்களை ஏவினுன. எங்கள தலைவனின் ஆணையை நிறைவேற்ற நாங்கள் இவனை இழுத்துச் செல்ல வந்துள்ளோம். நீங்கள் எங்களை இவ்வாறு தடுப்பதற்குக் காரணம் யாதோ அறிகிலோம'' என்றனா

இங்ஙனம் கூறிய எமதூதர்களைப பாாத்துத் திருமால் தூதர்கள நகைதது ''எமதூதாகளே! இநத அஜாமிளன செயத பாவஙகள யாவும் நாராயண நாமத்தால் சூரியனைக் கணட பனிபோல் அழிநதுபட்டன. பல்லூழிக்காலம கடுந்தவம புரிநத முனிவாகளுககும கிட்டாத பெரும் பேற்றினை இவன் அடைந்துள்ளான். நாராயண நாமத்தின் பெருமையை உங்கள் தலைவன் மறந்து விட்டானே? நாரணனின் திருநாமம் பல பிறவிகளில் செய்த பாவங்களையெல்லாம துடைப்பதுடன செய்யாத அறவினைகளின் பயனையும் அளிக்கவல்லதல்லவா? இப் பேருணமையை மறந்த நமது தலைவனுகிய எமனே பெரும் பாவம் செய்து விட்டான். இதனை நீங்கள் எமனிடம் சென்று கூறுங்கள்'' என் றனர். செயலிழந்த எம தூதர்கள் எமனிடம சென்று திருமால் தூதர்கள் கூறியவற்றை எடுத்துரைத்தாாகள்.

அதைக் கேட்ட எமன் பெரிதும் மனம் வருந்தி ''நாம் பெரும் பிழை செய்து விட்டோம். தன் பிள்ளையை அழைப்பதன் வாயிலாக அஜாமிளன் திருமாலின் திருநாமத்தை ஓயாது கூறி வந்துள்ளான். அத்திருப்பெயரே அவன் செய்த பாவங்களையெல்லாம் துடைத்துப் பல பிறவிகளிற செய்யும புண்ணியத்தின் பயனையும் அளித்து விட்டது. அதனல் அவன் திருமாலின் சாயுஜயத்தைப் பெற்று விட்டான்.'' எனறு கூறினுன்.

காலனுக்குக் காலனுய் இருந்து மாாககணடேயனைக காத்ததனல் சிவபெருமானைக காலகாலன் எனறு கூறுவாாகள். காலத்தில் வந்து அடியாாகளைப் பாலனம செய்வதனல் திருமாலைக் காலபாலன என்று துதிதது வணஙகலாமல்லவா?

சிறுவர்களே! நீஙகள் திருமாலின் திருநாமததை ஒதி வருவீர்களே யானுல் அவனருளால் உஙகளுக்குப் பெற வரும் பேறுகளெலலாம கிட்டும். நீங்கள் பிறவிப பெரும்பயனையும் அடைவீாகள.

ஓம் நமோ நாராயணய, ஓம் நமோ பகவதே வாசுதேவாய, ஓம நமச்சிவாய என்னும் இந்த மூன்று மந்திரங்களையும் காலையில எழுந்து நீராடியவுடனே மூன்று முறை கூறி வாருங்கள். அதனல் ஏற்படும் நற் பயனை நீங்களே காண்பீர்கள



## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள அவற்றின் பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஒரு இதழ் மட்டுமே அனுப்பப்படும். இது சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினுல, தகுந்த தேர்வுக்குப் பினனர், அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

தொடர் கட்டுரை :

# வைணவ வினு - விடை

விதவான ஸ்ரீ. உ. வே. தஞ்சை என. எஸ். தாதாசார்யா

**யன்னதுக்கேன சம்பின்னம நசகரஸதம அனந்தரம்**
**அபிலாஷோப நீதமச ததஸுகம ஸவாபதாஸபதம**

எனறபடி சுவாககம என்பது ஒரு தனி உலகம இலலே இங்கேயே நிீனததது நிீனததா வாறு நிறைவேறி துனபககலபபினறி அனுபவிககப்படும இன்பமே சுவர்ககம கடவுள ஒருவர் உண்டெனறும், அவா எலலோருககும பலன தருபவா எனவும கூருமல், எநத வைதிக காமாககளேச செயதாலும், செய்ததும ஏறபடும அபூாவம எனற சகதிகளே ஒன்று கூடி பரமாபூாவம, பலாபூாவம என்ற பெயரால மனிதனுக்குப் பயன தரும என்பாாகள. இநதிரன, அகனி, வருணன எனறெலலாம உருவுடன் தேவாகள யாரும இலலே அநத அந்தச் சொறகளே அநத அநத தேவதை எனபா இருபபினும இநதககருததை ஒரு கட்டுபபாட்டின அடிப்படையில் இவாகள கூறும் பொழுது இவாகளே உறுத்தும எனபதறகுப புகழ்பெறற மீமாமஸை சாஸதிரப் பேரறிஞா ''கணட தேவா'' எனபவா ''இவவாறு பேசிய (கடவுள வடிவம கிடையாது என) என் நாக்கு, தூயமையற்றுப போயவிட்டது அதனுல ஒரு தடவை பகவானது நாமமான ''ஹரி;'' எனபதை நிீனப்பதுதான இபபொழுது கதி'' எனறு கூறியவாககு ஒரு சானருகலாம இநத மீமாமஸா சாஸதிரத்தை கடவுளே ஏறகும மதமாக்கி அதறகுததக்கபடி சூததிரஙகளுககு விளககம் தநது ''ஸேசவர மீமாமஸை'' அலலது ''மீமாமஸா அபயுதயம''என்ற நூலே ஸ்ரீதேசிகன அருளியிருககிருர். வேதததின முறபகுதியை ஏறறு, முடிவுபபகுதியான வேதாநதததின கருததான ''பரமமதததை'' ஏறகாத இவாகளில மிக முககியமாகக் கருதப்பட்ட, மணடனமிசசிரா–குமரிலபட்டா எனபவாகளே ஸ்ரீஆதிசஙகரபகவதபாதாள திருததினூா வேதம 'அபெளருஷேயம'' அதாவது யாராலும வெளியிடபபட்டதனறு. கடவுளேபபோல தானே தோனறிய அழிவறற நூலாகும இவர்கள ''சபதம'' நிதயம எனபா இவர்களே ஸவத பரமாணவாதிகள எனபா ஒவவொரு பொருளிலும அதன தனமை அழியாதிருககும உதாரணமாக ''கோ'' இதில ''கோதவம'' எனபதில ''மனுஷயதவம'' எனறும பணபு உணடு அதற்கு ஜாதி எனபபெயா இநத ஜாதி எபபொருள மாறினுலும மாருது. மாடு, மனிதன இவாகளின உடல் இளேககலாம, பெருககலாம, முதுமை அடையலாம். ஆயினும இவைகளில அழியாமல மறைநதிருககும் கோத்வம, மனுஷயதவம எனற ஜாதி மாருது அழியாது எனபதே இவாகளின கொளகை ''பூனே இளேததாலும அதனுடைய சகுனததடைககுத்தடை உணடோ?'' எனறும, 'வருதத சூாியானுலும கோதவம மாருதிறே'' எனற வாககியஙகளே ஈணடு நிீனககவேணடும. இதனுல இவாகளுககு ஜாதி வாதிகள எனபபெயா மறறும இவர்களின கொள்கையில் ஒவவொரு விீனசசொலலிலும் 'அர்த்தபாவநா', 'சபதபாவநா' எனற இரு விஷயஙகளே ஒப்புககொணடிருக்கிருாகள இதனுல இவர்களேப ''பாவநாவாதிகள' எனபா இவவகையில பல சிறபபு அமிசஙகள இவாகள கொளகையில் உண்டு. பெரியோாகளிடம கேட்டறியலாம

**தார்க்கிகர்கள யார்? இவர்களின வழி எனன?**

எநத விஷயத்தையும், அனுமானம, காரணம, பிரமாணம இவைகளேக்கொணடே தீாமானிபபவர்களானதால இவாகளேத் ''தாாககிகாகள'' எனபா தர்க்கம என்ருல ஆராயநது அறிவது எனபபொருள. இந்த சாஸ்திரமும பதினுனகு வித்யைகளில் ஒனறு. தர்ககத்தை ''நியாயம்'' எனவும அழைபபா. இதுவும ஒரு சாஸதிரம தான இதை சமயததில சோததுப பேசுவதிலலே இதில வைசேஷிகாகள, நையாயிதாகள-என இரு பிரிவுகள் உண்டு இவாகள சரீரததைத் தவிாதது, ஜீவாதமா, பரமாதமா தத்துவத்தை ஒபபுககொண்டவாகள. ஜீவாத்மா அணு அல்ல விபு' (எஙகும பரவியுளளவன) ஆதமாககள தனிததனியானவை. பரமாணுககளின சோக்கையால இவவுலகம் உண்டாகியது. கடவுளே அநுமானத்தால ஏறகிருாகள். இககடவுளே உலகிறகு நிமிததகாரணம என்பா. நிமிதநகாரணம் எனபது, மண்குடத்திற்குக் குயவன் எவவாறு நிமிததகாரணமோ அவவாறு. பிறப்பு இறபபு எலலாம உடலுககனறி ஆன்மாவுககில்லே உலகம அழியக கூடியது. துனப வடிவானது. அவன் வன செயயும் விீனகளே மறுபிறவிககும் அபபிறவியில ஏற்படும இனப துனபதுனபததிற்கும காரணம சிறறினபங்கள் யாவும தேன தடவிய விஷக்குடம் போனறது. தூய நிலேயில் கருமாககளேச செய்தால கடவுள அருள ஏறபடப பிறகு தத்துவ ஞானம பிறககிறது அநத ஞானத்தால ஆதமஸாக்ஷாத்காரம ஏறபடும பிறகு துன்பம அடியோடு அழியும இதுதான மோக்ஷம் எனபது மோக்ஷததசையில் ஜீவன கலபோல இருககிருன. எதையும பறறறறுச செயதால அவவிீனகளால ஏறபடும பலன பாறையில விழுநத விததுப போல செயபவனிடம ஒட்டுவதிலலே வேதம கடவுளால் கூறபபட்டது மறறும இவாகள, மனிதனுககு ஏறபடும 21 துககங்கள போவதே மோக்ஷம எனகிருாகள். 21 துக்கங்கள மூலமாவது ஒரு உடல, ஆறு இந்திரியங்கள (மனததுடன) ஆறு விஷயங்கள, (சிறறினபஙகள) ஆறுபுததிகள், சுகம, துக்கம-ஆக இருபததொனறு தாக்க சாஸதிரததில புலமை பெற்றவாகள; வாததததில வெலலும ஆறறல மிககவா எல்லா சாஸ்திரஙகளுககும இநத சாஸதிரததின தொடர்பு இருந்தே காணும். (தொடரும்)

தஞ்சையை நினைக்கும போதே சோழரின் சைவப் பற்றிற்கு அறிகுறி யான 'ராசராசேச்சரம்' என்ற கலைக் கோயில் நம் கண முன்னால் நிற கிறது. இக்கோயில் கி பி. பத்தாம் நூற்றாண்டின இறுதியில் கட்டப் பட்டது. சைவக குரவர்களில ஒரு வரான அபபா சுவாமிகள திருவீழி மழலைத் திருத்தாண்டகததில் 'தஞ சைத் தளிக் குளத்தார' என்று குறிப்பிட்டுள்ளார்.

க்ஷேததிரக கோவைத திருத்தாண் டகத்தில் 'தஞசை' என்றும சிறப் பித்துள்ளது. பழமையான விஷ்ணு ஆலயங்களைக் கொண்டு ஆழ்வார் கள் இருவரால் பாடப பெற்ற பெரு மையுளள ஸ்தலமாகும. இதனை,

'' தமருள்ளம தஞ்சை தலையரங்கம
தண்கால்
தமருள்ளுந் தண் பொருபபு வேலை-
தமருள்ளும்
மாமலலைக் கோவல் மதிட் குடந்தை
யென்பரே
ஏவல்ல வெந்தைக்கிடம்'

எனபது பூதத்தாழ்வார் அந்தாதிப் பாடல்!



ஸ்ரீ மாரியம்மன் மூலவிக்கிரகம்.

# ★ தஞ்சை-புன்னைநல்லூர் ஸ்ரீமாரியம்மன் ★

இறைவன் ஆசரிதாகள (நாடி யவர்கள) இதயத்திலும தஞசை முதலான திருபபதிகளிலும சனனிதி பண்ணி எழுநதருளியிருககிறான் என பது பாட்டின கருத்து. எல்லாத தலங்களுக்கும முறபட தஞசையை வைததுக் கூறுவதால ஒருவாறு இத் தலததின சிறப்பு விளங்கும.

பூதத்தாழ்வாரின காலம கி. பி. ஆறும நூற்றாண்டின் பிற்பகுதியும் ஏழாம நூற்றாண்டின் முற்பகுதியும ஆகும. அவர் காலத்திறகு முன னரே இத்தலம் சிறபபுற்றிருந்தமை இதனால எளிதில் விளஙகுவதாகும

கி பி. எட்டாம நூற்றாணடு முழு வதும வாழ்நதிருநத திருமஙகை மன்னன பெரிய திருமொழியின் தொடககததில, திருமநதிரப் பதிகத தில் இத்திருப்பதியைக் குறித்துள்ள

படமும் கட்டுரையும்.
திரு. வி. எஸ். ஸ்ரீநிவாஸன-தஞசாவூர்.

மையும இத்தலத்தின் சிறப்பிறகுச் சானறு பகர்வதாய உளளது. இதனை,

'' . . . . . . . .
அமபினால அரக்கர் வெருக்கொள
நெருக்கி
அவருயிர் செகுத்த எம் அண்ணல்
வமபுலாஞ்சோலை மாமதிள தஞசை
மாமணிக கோயிலே வணஙகி
நம்பிகாள்! உயயநான கணடு
கொண்டேன
நாராயணா வெனனும நாமம''
(பெரிய திருமொழி 1-1-6)

இபபாட்டில், பகவான் தனனு டைய சங்கலபத்தினால அனறைககே அமபினால தஞசன், தண்டகன என கிற கொடிய துஷட அசுரர்களை அழித்த வரலாறு குறிப்பிடப்பட்டுள ளது.

காவிரியாற்றின தெனபுறமாய எட்டு மைல் தூரத்தில் அமைநதிருக்

கிறது தஞ்சை மாநகர். இதற்கு புராண-இதிகாசங்களின்படி 'அழகாபுரி' எனற பெயருமுளளது. இவ வசுராகளை கொல்வதறகு முன் அழகாபுரியைச் சுற்றித திக்கெட்டிலும் அஷட சகதிகளைக காவலுககு அமைத்தான் சமசார மூாத்தியாகிய ஈஸவரன். அந்த அஷட சகதிகளில நகரின கிழ் புறத்தில அமையப பெற்ற சக்தியே 'புனனை நல்லூா மாரியம்மன்' என்று, 'சோழசமபூ' என்னும பண்டைக்கால நூலொனறு கூறுகிறது.


மாரியம்மன் ஆலயத் தோற்றம்.

சோழாகளின வரலாற்றைத் துருவிப பார்ததோமானால 'கீர்த்தி சோழன்' என்னும அரசன மககட பேறின்றி வெகு காலமாக வருந்தினன். அம்பிகையின் அருளால தேவ சோழன் என்னும மகவைப பெற்றனன் என்று 'பிரஹதீஸ்வர மகாத்மியம்' என்னும் நூலிலிருநது புலனாகிறது

தஞ்சையில் மகாராஷடிர ஆட்சியை ஸதாபிதத வெஙகோஜி மகாராஜா சதரபதி என்ற ஏகோஜி மன்னா கி பி. 1680ல தீாதத யாத்திரை மேற்கொணடார். பல புண்ணிய நகரஙகளில தரிசனம செயது கொண்டு வருகையில் மன்னனின செல்வ மகளின் கணணில் ரத்தம வடிந்தது.

மகள் துடித்தாள்; ஓவென்று அலறினாள; சிப்பநதிகள நடுங்கினார்கள்; மன்னன் செய்வதறியாது மனம் கலஙகினான். தஞ்சை ராஜ வைததியா மருத்துவம பாாத்தும் கண்களிலிருநது வடிந்த ரத்தக் கண்ணீா நிறகவில்லை. மந்திரிகளின் வேண்டுகோளினபடி திருச்சியை அடுத்த கண்ணபுரமென்னும சமயபுரத்தையடைநது அங்குள்ள அனனை மகமாயியை வேண்டி வழிபடடு அஙகேயே அமர்ந்திருந்தான; அனனையை நோக்கி கதறியழுதான் தஞ்சை மாமன்னன்

தன்னை நமபி வந்திருக்கும் மன்னன்மீது மகமாயிக்கு அருள சுரநதது. அன்றிரவு மனனன் கனவில் மகமாயி தோன்றி 'தஞ்சைக்கு கிழக்கேயுள்ள புனனைப் பூசசொரியும பூம்பொழிலுக்கு வா, அங்கு நான் புற்றுருவாய் இருப்பேன்; அங்கே வநது என்னைத் தரிசித்துப் போ!' எனற உத்தரவு கிடைக்கவே, மனனன் அனனையின் கட்டளையை ஆணையாக மேற்கொண்டான்.


கோயிலிலுள்ள பெரிய போஜன சாலையும, ஸ்தல விருக்ஷம் வேம்பும்.

மறுநாள் பரிவாரங்களுடன் தலை நகராகிய தஞ்சைககு வநதபின் புன்னைக் காட்டில அம்பிகையைத் தேட இறுதியில், புன்னை வனத்தின நடுவே புற்றிருக்கக் கண்டான். அதில அனனை மகமாயி அருள் உருவம தெரிந்தது.

அவன் மெய சிலிர்த்தது; உடலெல்லாம் நடுங்கியது. மெய் மறந்து அருள வேண்டி நின்றான். அன்னை உருவம தெரிந்த அந்தப் புற்றையே மாரியம்மனாகக் கருதித் திறந்த வெளியில இருநத அம்பிகைக்குத் தெனனஙகீறறால் சிறிய கூறையை அமைதது வழிபடடு வந்தான்.

மனனன செலவமகள் கண்நோயும் நீஙகியது. தனனைப் போல மக்களும் மாரியம்மனின் பேரருளைப் பெற்று உயர்ந்திட காட்டில் நல்லவழி அமைத்து, அம்பிகையின ஆலய வழிபாடுகளுக்காக அபபுன்னை வனத்தை சுற்றியுள்ள நல்லூரையே அம்மனுக்குக் காணிக்கையாக்கி மகிழ்ந்

தான். கூறை ஆலயமானது; நாள டைவில பெரிய கருஙகல ஆலயமாக மாறியது.

வெஙகோஜி மகாராஜா சத்ரபதி அரசாண்ட காலம கி பி. 1676-1683 ஆகும.

பின்னா 1729-1735 வரை ஆண்ட அவரது புதல்வர் துளஜா ராஜாவின புதல்வி கண்ணொளி இழநது மிகக கலஙகினள். வைசூரி அவளை வாட்டி எடுததது. மனனன் கோயில சென்று அன்னையை வேண்டி நினறான். அன றிரவு அமபிகை மன்னனின கனவில ஓா அநதணச சிறுமியின உருவில தோனறி, தன சன்னிதானத்திற்குப புதல்வியுடன வந்து தன்னை சேவிக கும்படி கூறி மறைந்தாள

மறுநாள மனனனும தனது அருமைப் புதல்வியோடு அம்பிகையின் முன சென்று வழிபட்டு, கற்பூர தீபம் செயது நிறக இராஜ குமாரியின் பார்வையை மறைத்த 'பூ'


துளஜா ராஜா-ஆட்சிக்காலம் (1729-1735)

தானுகவே விழுநது இராஜகுமாரி தன பாாவையைப் பெறறனள்; மன னனும மக்களும மகிழந்தார்கள; ஆனந்தக் கணணீா வடித்தார்கள, தஞசை நகரே விழாக் கோலம் பூண் டது போலிருந்தது.

வினை தீர்த்து விளையாடும வேல விழி நாயகிககு அழகிய தோா திருக கோவில் கட்டுவித்து, சிறிய திருச சுறறு மாளிகையையும அமைததான மன்னன. அமமனின ஆலயததை அழகு செயது வாழநத மனனனுக்கு அன்னை மாரியம்மனின திருவருளும் எளிதில கிடைத்தது.

அககாலத்தில் தனது தபோ பலத் தால சிறநத ஞான மெயதியவரும், உலக குருவாக விளஙகி ஞான பண் டிதராகத திகழநதவரும, தனது மூத்த சகோதரா சஹாஜி மனனரால் பெரிதும் போறறபபடடவருமான ஸ்ரீ சதாசிவ ப்ரமமேநதிர ஸவாமி களைக் கொணடு புறறுருவாய இருந்த அனனை மாரியமமனின திருவுருவததை, அபபுற்று மண்ணாலேயே பீடம அமைதது யநதிரம வைத்து பிரதிஷ்டை செயது வைத்தான் மனனன.

சிவன், விஷ்ணு, சக்தி ஆகியோரை ஏக காலததில இக்கோயிலில் தரிசிக்கலாம்; இது போல வேறு எநத கோயிலகளில இலலை என்பது குறிப்பு. மறறும சைவாகம விதிப் படி பூஜைகள் நடததுவதறகு சிறந்த மானியங்களுமவழஙகினன். அனறு முதல் இனறு வரை அமபிகையின் அருளைப பெற்று இனப வீட டையடைநத அடியாாகள பலா.

பொன்னையும மணியையும வாரி வழஙகி தேவியின திருமேனியை அழகு செயத–தொண்டு செய்த தஞசை மராட்டிய மனனாகளின திருவுருவஙகளை கதை வடிவிலும, சித்திர வடிவிலும, ஸ்ரீ பரமமேநதிர ஸ்வாமிகளின திருவுருவைக்கதை வடிவிலும கோவிலுககுளளேயே அமைக கப்பட்டுளளன

**சரித்திரப் பாதையில்:**

கி. பி. 1776-ல் வாழநத பிரதாப சிங் மகாராஜா அனனையின பேர ருளைப பெற்று அருமுழிப பேட்டை எனனும அழகிய கிராமததையே காணிககையாககினா. தவிர, கி பி. 1788 முதல் 1798 வரை தஞ்சையை மாண்புடன ஆணட அமாசிங என பாா அமபிகையிடம் சிறநத பகதி மேலிட்டு இப்போது தஞசை மாவட்டம, பாபநாசம் தாலுகா விலுளள 'பணடார வாடை' எனனும் கிராமததிலுளள ஓா செழிபபான பாகததை அமபிகைககு மானியமாக அளித்து, அப்பகுதிககு 'மாரியம மாள புரம்' என்னும பெயரும வழங்கியுள்ளாா


கோயிலின் ராஜகோபுரம்.

இதனை 'சரபேந்திர பூபால குற வஞ்சி', 'சோழ சமபூ', 'பிரஹதீஸ வரா் மஹாதமியம' முதலிய நூல களிலும, ஸ்ரீ மாரியமமனின மகிமை களையும் பரககக் காணலாம.

தஞசையில் அமாசிங அரசருக்குப பிறகு சிஙகாதனம ஏறிய சரபோஜி மகாராஜா (1798-1833) தம முன னோாகளின ஈகைத தனமைககுப பினனடையாதவா அவா அம மனுககு ஆலயததில செயதுளள சிறநத திருப்பணிகள ஏராளம–மகா மண்டபம, நாததன மணடபம, முன் கோபுரம, பெரிய திருசசுறறு முதலியவறறைக கட்டுவிதது அமபிகைககு குமபாபிஷேகமும செயது வைத்தாா இவாதான கலவிக களஞ்சியமான சரஸவதி மஹாலை நிறுவியவா.

அவரை யடுத்து சரபோஜியின் புதலவர் சிவாஜி மன்னா 1833-1855 முடிய செஙகோலோச்சினூர். அவா காலததில தன மூதாதை யரைப் போலவே முன மண்டபம், மூன்றும் திருசசுறறு முதலியன கட்டு வித்துப் பல திருபபணிகள புரிநதுள ளாா.

இனறு கோவிலில் நுழைநததும், நமது கண்ணை ஒருங்கே கவரும மராட்டிய மன்னர்களது சிறநத ஓவியங்கள் நிறைந்த வெளி மண்ட பத்தையும், பெரிய போஜன சாலை முதலிய ஒன்பது கட்டிடங்களையும், வடக்கு வாயில் கோபுரத்தையும் சிவாஜி மன்னரின பட்ட மகிஷி யாகிய காமாக்ஷியமபா பாயிசாகேப் அவாகள கி பி 1892-ல் எடுப்பு வித்தார்.

அந்த இராஜ பரம்பரையைத் தொடர்ந்து தற்போது வாழ்ந்து கொண்டிருககும் ராஜஸ்ரீ-ராஜாராம் சாகேப் போன்ஸ்லே அன்னை மாரி யம்மனின அருளைப் பெற்றவா. ஸ்ரீ அம்மனின் தரிசனத்திற்கென நெடுந தூரம் நடந்து வரும பகத கோடிகள் இளைப்பாறுவதறகு ஆலயததின முன புறத்தில் தகரததாலான கொட் டகை யமைததும், அன்னையின் அரு ளும் மகிமையும மக்கள அனைவரும் பெறறு உயாநதிட அமபிகையின் நிததிய வழிபாடுகளையும், நிததிய பூஜை மற்றும விழாககளையும அரு கிருநதே மககள பாராட்டும வகை யில் சிறபபாக நடத்தி வருகிறுர்.

அமபிகைககு விலையுயாநத பல ஆடை ஆபரணங்கள், பாணடங் களும உள்ளன. தானுகவே புன்னை நல்லூரில் வநது அமாநது தனனை யும பெருமைபபடுததிக கொண்டு மக்களையும காத்துவரும் அன்னை மாரியமமனை மககள தானுகவே தோனறிய 'ரேணுகா' தவச் செலவி என்று பாராட்டுகிறுர்கள்

அன்னை புறறுருவாய நினறதால் அநதப் புற்று மண்ணோடு தைலங் கள், புனுகு, ஐவ்வாது சேர்தது அரைத்து அனனை மாரியம்மனை உரு வாக்கினுாகள் உயிர் தோறறமாய் அமைநதுவிட்ட அந்த அனனையின் உருவம கருங்கல சிலை போலாகி விட்டது ஏனபது குறிபபு.

பிற செய்திகள்:

தெனனுட்டிலேயே சாந்த சொரூபி யாய, அருட் பிரகாசமாய் விளஙகும அன்னை மாரியம்மனுக்கு ஐந்து வருஷததிற்கொரு முறை 'தைலாபி ஷேகம்' நடககும் இதில் பல உயர்ந்த மூலிகைகள், வாசனைத் திர வியஙகள் கலந்திருக்கும். இந்த மாரியம்மனை ஜாதி சமய வேறு பாடில்லாமல் ஹிந்து, வைணவர், முகமதியர், ஜைனர், கிறிஸ்தவா முதலிய எலலா மதத்தினரும நாடோறும் வழிபடுகிறுர்கள.

அனனை மாரியமமன் தனனை நம்பி வநத அடியார்களுக்கு வேண்டிய வர மளித்து வருகிறுள். உதாரணமாகப் பேசாத ஊமையும் பேசியிருக்கிறது; அமமையால் கண் ஒளி இழந்தவாகள் கண பெறறிருக்கிறுர்கள.

அன்னை மாரியம்மன் கோவில் இங்கு அமைநது இருப்பது போல வேறு இடஙகளில் அமையவில்லை. தவிர, கோபுரஙகளைப் பாாததால சிவன் கோவிலைப் போலத்தான் காட்சியளிக்கும. இஙகு அம்பிகை வடககு முகமாக அமர்ந்திருப்பது மிக முககியமான அமசம. இதை விஷ்ணு அமசம் என இதிகாஸஙகள கூறும.

நாம் நினைதத காரியம கைகூட வேணடுமானுல் பதினேரு செவ்வாய்க் கிழமை அாசசனை ஆராதனை செய்து வழிபட நிசசயமாக நனமை ஏற் படும். இதற்கு சதாசிவ ப்ரம்மேந்தி ரரின் ஸ்ரீ சககர பிரதிஷ்டையின் சகதியே காரணம எனபா. நியாய மான கோரிககைககளுககுத்தான் பலன் தரும எனபது முக்கிய குறிப்பு.

அம்மனுககு நான்கு கால பூஜை கள ஆகம விதிப்படி நடக்கின்றன. மூனறு காலம பிரமமேந்திரரால் ஸ்தாபனம் செய்யப்பெற்ற ஸ்ரீ சக்கரத்துக்கு அபிஷேக ஆராதனை கள நடைபெறும். அம்பாளின் சன்னதியில திருமணங்கள், காதணி விழா, முடிதிருத்தல், உபநயனம் ஆகியவை நடைபெறுகின்றன.

அமபிகையின ஆசி பெறற பகதர் கள வெல்லம, உப்பு, நெல், தென னஙகன்று, சேவல், ஆடு இவறறை காணிககையாகச செலுத்துகிறுர் கள் அப்படிக் காணிக்கையாகச் செலுத்திய பொருட்களை பகிரஙக மாக ஏலம் விடப்படுவதையும் காண லாம் தவிர, தமிழநாட்டிலுள்ள தூக்கை அம்மனுக்கெலலாம் பூஜை செயபவர்கள பூசாரிகள். ஆனுல், இங்கே பூஜை செய்பவர்கள் குருக கள்; சிவாசசாரியார்கள்

இன்று எஙகுப் பார்த்தாலும் கோயில்களில் 'விபூதி' பிரசாதமாகக் கொடுக்கப்படுகிறது. ஆனுல் இக் கோவிலிலோ அன்று கொடுத்த சாம் பலையே இனனும் விபூதிப் பிரசாத மாகக் கொடுத்து வருகிறுர்கள.

கணகண்ட தெய்வமாக, வெற்றி தரும தாரகையாக, கலி தீாக்கும் சக்தியாக, அதர்மத்தை நீக்கி, தர் மத்தைக் காக்கும் அனனையாய் விளஙகி வரும் ஸ்ரீ மாரியமமனை 'சகதி முத்து மாரியம்மன்' என்றே மக்கள் வணங்கி அருள் பெற்று வாழ் கிறாாகள். நீஙகளும் அனனை அருள் பெற்று வாழ தஞசை ஸ்ரீ மாரியம் மனைச் செனறு வணங்கி வழிபடுங் கள்.

இங்கு ஒவ்வொரு ஞாயிறறுக் கிழமையும திருவிழாதான அனறு பக்தாகள் கூட்டம் நிரம்பி வழியும். இங்கு ஆடி மாதத்தில் முத்துப் பல்லககு-'தஞசை முத்துப் பல்லககு' எனபது-இங்கு வெகு பிரசிததம. ஆவணி மாதத்தில் பிரம்மோறசவம் பதினெடடு நாட்கள் நடைபெறும.

ஆவணி கடைசி ஞாயிற்றுக்கிழமை தோததிருவிழா! புரட்டாசி மாதம ஞாயிறறுக்கிழமை தெபபோறசவ மும நடைபெறும. இக்கோயிலின் ஸ்தல விருக்ஷம் வேமபு. கோயிலில் உயிர்பபலி கொடுபபதிலலை. கோயி லின் அருகில ஸ்தல புஷகரணி யுளளது

ஆக்கலு மழித்தல காத்தலா குமுத்
தொழிலால் தந்த
மாக்களி னனமைதீமை மனத்தினு
லறிந்தேயென்றும
காக்கவே 'புன்னை நலலூர்' காரணக்
கோயில கொண்ட
பூக்கமழ மாரியமமன் பொன்னடி
போறறினேமே?

எனனும வெண்பாவினுல அறியலாம், அம்மையின மகிமையை!

★

# கோயில் வளர்ந்த கதை

டாக்டர். ஏ. வி. ஜயசந்திரன்,
சென்னை.

**ஆகமங்கள் கூறும் பொருள்கள்**

பலவிதப் பூமிகளைப் பற்றி பகர்ந்த ஆகமங்கள், அந்தந்த சமயச் சார்புள்ள ஆலய அமைப்புககு உரிய உயாந்த நிலத்தைத் தேர்ந்தெடுத்து, அதில் தலததை நிர்ணயிக்கும் நெறிகள் பற்றியும, அதற்கு அவசியமான முறைகள் பற்றியும பகுத்திடும்போது, பொதுவாகக் கீழ்க்கணடவற்றைப் பற்றிக் கூறும்.

1. தல நிர்ணயம்: நீர்நிலை அருகே அமைந்த உரிய உயரிய நிலத்தை நிச்சயித்தல்.

2. பிரதிட்டை: உரிய இடத்தை அடைந்து அதற்கான சாந்தி முதலிய கிரியைகளைச செய்தல்.

3. கருத்தா: தலம் அமைக்கும் எஜமானன், கட்டுமானப் பணி ஆற்றும் ஸ்தபதி, இவர்கட்குரிய ஆச்சாரியர் முதலியோரின் தகுதியுரைத்தல்.

4. சோதனம: நிர்ணயித்த நிலத்தைத் தூய்மை செய்தல்.

5. கர்சனை: நிலததை உழுதல்.

6. அங்குரார்ப்பணம்: முளைப் பாலிகை.

7. வாஸ்து புருஷ மணடலம்; திக்கு நிர்ணயம் செய்து நிலத்தை வரையறுத்தல்.

8. சூத்திரபதம்: அளவை.

9. சிலாநியாசம்: சிலை நிறுத்தல் (கடவுள மங்கலம்).

10. பிரசாதப்ரதிக்கிருதி: கட்டிட வரை வடிவம் செய்தல.

11. பிரசாதாங்கம்: கருவறை, அடிக்கல், முடிக்கல், பிராகாரங்கள், பாலாலயம், மணடபங்கள், விமானம் முதலியவை அமைத்தல்.



நத்தா ரமேஸ்வரம்' சிவன் கோயில்-ஸ்ரீதர்.

**சடங்குகள் புரிவதற்குரிய புண்ணிய காலங்கள்:**

மேற்குறித்த எநத முறை துறைகளையும் முயலுமுனபே, உரிய சடங்குகளை உத்தமவேளை பார்த்தே இயற்றுதல் வேணடும். ஆதலின், அனைத்துச் செயல் முறைகளுக்கும அடிப்படையாயக் கால நிமித்தஙகளைக் கடைப்பிடிக்க வேணடும் எனக் காமிகமும் காஸயபமும் முதலாம் நூல்கள் பேசுமு. அவற்றைப் பற்றி ஈண்டு காணபோம்.

**நல்லாண்டு.**

வளமார்ந்த வருஷம எனபது, செழிப்பான அறுவடையும், அறநெறிவழாது அரசனின ஆளுகையும் நேர்ந்தது.

மாதம: காஸயப ஞான காணடப்படி மாகம, புரோஷ்டம மாதம், ஆஷாடம கூடாது. காமிகபபடி, மாகம் (மாசி) தவிர மற்றெல்லா உததராயண மாதங்கள மாணபுடைதது. தட்சிணாயன காலததும் பனி நீடிப்பதானால், கார்த்திகை, அஸ்வாயுஜம், சிராவணம முதலாம் மாதஙகள் கொளளத்தக்கன.

(41-ம பக்கம பார்க்க)

# புராண உண்மைக்கு விஞ்ஞான சாட்சி!

'புராணங்கள்' - இந்த நாட்டின் தொன்மையான கலாசாரத்தை, அந்தக் கால வாழ்வியல் முறைமையை, நம்முடைய அறிவுக்கும் எட்டாத ஆன்மீக ரகசிய உண்மைகளைக் கூறும் வரலாற்றுக் கருவூலம் என்று சொன்னால் அது மிகையே கிடையாது. நமக்குப் புரியாத காரணத்தாலும், விளங்கிக் கொள்ள முடியாத நம் சிற்றறிவின் பலஹீனத்தாலும், எதையுமே சந்தேகத்துடனேயே பார்க்கின்ற நம் ஏலாமையாலுமே பல தெய்வீக அற்புதங்களை கற்பனை என ஒரு மாதிரியாக விலக்கி விடுகின்றனர் நம்மில் சிலர். புராணங்கள உண்மையில் என்றோ, எப்போதோ, இந்த மண்ணில் நிகழ்ந்த சரித்திரம்தான் என்பதற்கு, இன்றைய விஞ்ஞானமே சாட்சி பகரும் நிதர்சனம், பாண்டிச்சேரிக்கு அருகில், இன்றும் நின்று நிமிர்ந்து விளங்குவது நமக்கு வியப்பை அளிக்கும்.

இரண்டு கோடி வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு சம்பவம், உண்மை தான் என்று இன்று பட்ட வர்த்தனமாக ஒப்பத்துடன் எழுதி வெளியிடப் பெற்றிருக்கிறது.

அதுபற்றிய புராண விவரமும், விஞ்ஞான விளக்கமும் இதோ:

பாண்டிச்சேரியிலிருந்து மயிலம் என்ற முருகர் தலத்துக்குச் செல்லும் வழியிலே பெரும்பாக்கம் எனும் சிற்றூர் உள்ளது. அங்கிருந்து மேற்கு நோக்கிப் போனால் 'திருவக்கரை' என்ற குக்கிராமம் வரும்.

புதுவை என்ற பாண்டிச்சேரி ரயில் நிலையத்திலிருந்து பதின்மூன்று மைல் தொலைவில், தமிழ்நாடு மாநிலத்தின் தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள இந்த திருவக்கரை எனும் சின்ன கிராமத்தில் முக்கால் வாசி இடங்களில், சுற்றிச் சுற்றிக் கம்பி வேலிகள் போடப் பெற்று கிராமத்தின் பெரும்பகுதியும் "இந்திய அரசின் புவி இயல் இலாகா'வின் ஆராய்ச்சிக்கு உட்பட்ட பிரதேசம் என்ற அறிவிப்புப் பலகைகளே காணப்படும். மிக மிகக் குறைந்த ஜனத்தொகையைக் கொண்ட இந்த சிற்றூரின் நடுவே செம்மாந்து நிமிர்ந்து நிற்கும் ஆஜானுபாஹுவான ஒரு திருக்கோயில் விளங்குகிறது. இந்தத் திருக்கோயிலின் அமைப்பிலிருந்து எல்லாமே விசித்ரமாக உள்ளன. தாண்டவமூர்த்தியாகிய அம்பலவன் "இடது பாதம் தூக்கி ஆடும் நடராஜன" ஆகவே எல்லாத் தலங்களிலும் காட்சி தந்தாலும், இங்கு வலக்காலைத் தூக்கி, வக்ர தாண்டவம் ஆடுவது குறிப்பிடப் பெற வேண்டிய ஒன்று. சனி பகவானுக்கு என்று

ஜோதிஷ விசாரதை
திருமதி வி. பிச்சையம்மாள்
பாண்டிச்சேரி-3

தனித்த ஒரு சந்நிதியில், சனிவாகனமாகிய 'காகம்' வழக்கத்துக்கும் மாறாக தென்புறம் நோக்கி வக்கரித்து விளங்குவதையும், இந்த பகவானை 'வக்ரசனி' என்றழைப்பதையும் நோக்க வேண்டும். இராஜ

## அழகுக்கு அழகு

திரு. ஆர். ருக்மணி - காரைக்குடி.

அரங்கனுக்கு-நடை அழகு.
வரதனுக்கு-குடை அழகு.
அழகருக்கு-படை அழகு.
மன்னருக்கு-தொடை அழகு
அமுதனுக்கு-கிடை அழகு.
நாரணறகு-முடி அழகு.
திருமலையில்-வடிவழகு.
சாரதிககு-உடை அழகு.

**விளக்கம்**

ஸ்ரீரங்கம ரெங்கனத ஸ்வாமியின்-நடை.

காஞ்சிபுரம் வரதராஜனின்-குடை.

அழகா கோவில் கள்ளழகர் எதிர் சேர்வை கோலத்தில சகல-(படை)களுடன் மதுரைக்கு எழுநதருளுவது (படை-ஆயுதம்)

ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாளின் (தொடை—மாலையை) அணிந்து கொள்வது.

கும்பகோணம் அமுதனின் (கிடை) பள்ளிகொண்ட-அழகு.

திருநாராயணபுரம் செல்லப்பிள்ளைகுப் பங்குனி மாதம், சுக்ல பக்ஷ தசமியில் சூட்டி மகிழும வைரமுடி.

திருவேங்கடவனின் அதி அற்புத வடிவழகு.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதியின் ஓட்டுநா போனற உடை அலங்காரம்.

கோபுரத்தருகில் இடப்பக்கம் வக்ர காளி சந்நிதி உள்ளது. மஹாகாளியின் பெருந்திருஉரு மெய்சிலிர்க்க வைக்கும். மணடை ஓட்டுகரீடம், வலது செவியில் ப்ரேத குண்டலம், தலைகள் மாலை, தலைமாலையே மார்புக்கச்சு, கோரைப் பற்கள, இந்த வக்ரகாளி சந்நிதியின எதிர்ப் புறம், மேற்குப் பார்த்து கோமுகம் மாறுபட்ட வக்கரலிங்கக் கோயில், இந்த இராஜ கோபுரதது எல்லையினுள்ளேயே ஸ்ரீதேவி, பூதேவி இல்லாமல், தனித்த நிலையில் மாறுபட்ட தோற்றத்துடன் திருவேங்கடவன, சக்ரத்தை ப்ரயோகிக்கும் நிலையில் ஆறடி உயரத்தில் அற்புதமாக சேவை தருகிறார். இவையல்லாமல் ஸஹஸ்ர லிங்கக கோயில் உள்ளது. மூல ஸ்தானத்திறகுள் நுழைகிறோம். அறபுதமான காட்சி காத்திருககிறது. ஈசனை உருவமாக, அருவமாக, அருவுருவமாகக் கொணடாடித் துதிக்கின்றோம். உருவ வழிபாட்டுக்கு நடராஜா; அருவ வழிபாடடுக்கு தில்லையில் 'ஆகாசலிங்க சிதமபர ரகஸ்ய வழிபாடு' அருஉருவத்துக்கு உருவமிருப்பது போலவும், இல்லா நிலை போலவும் 'லிங்க' வழிபாடு. இங்கு லிங்கத்துக்கு 'முகத்தோற்றம உள்ளது'. அதுவும் மும்முகம. சித்தாந்த சாராவளியில் சொலலப் பெற்றுள்ளதுபோல தத்புருஷமுகமும், அகோர முகமும், வாம தேவ முகமும கூடிய ஈசனை இங்குத் தரிசிககிறோம். இந்தத் திருககோயிலில், ஐம்பது ஆண்டுகட்கு முனவரை, நெடுஙகாலம் பணியாறறிய, அமரம் பாக்கம்-ப்ரஹமஸ்ரீ வெங்கட்ரமணய்யர், இநத ஆலய அமைப்புப் பற்றியும், ஈசனின் விசேஷித்த கடாக்ஷ லீலைகள் பற்றியும், ஆத்த மண்டபத்தின் அடியில், அந்தக் காலத்தில் இருந்து, பிறகு முழுதுமாகத் தளவரிசை கொண்டு மூடப்பட்டுவிட்ட சுரங்கக் கோயில் அமைப்புப பற்றியும் கேட்டு, நேரில் தரிசித்த பேறு கிடைத்து, இந்தத் தலத்தின புராணப் பெருமையை அறிநதபோது, ஆச்சர்யம் தரத்தக்க ஒருண்மையை அது தன்னுள்ளே பொதித்து வைத்திருககக் காண்கிறோம்.

வெளி ப்ராகாரத்தில், மூலஸ்தானததுககுத் தெனபுறம ஒரு சமாதிக் கோயில் உளளது. இது விவரம் இன்றும்கூட பலருக்குத் தெரியாது. துவார பாலகர்களுடன் கூடிய, லிங்கம் நிறுவப் பெற்ற இந்த சந்நிதி 'குண்டலினி மஹரிஷி' எனற சித்த புருஷரின் ஜீவ சமாதி. இந்த முனிவரின வழித்தோன்றலான 'வகரன' என்பான் சிவபெருமானை நோக்கிக் கடுமையான தவம இயற்றி அளவற்ற வரங்களைப் பெற்று, இணையில்லாத வரபரசாதியாகத் திகழ்ந்தானாம. திருவக்கரை எனறு இனறு அழைக்கப் பெறும் இந்தத் திருத்தலம, அவன காலத்தில், மிக அடாந்த வனாந்தரமாகத திகழ்ந்ததாம். வரஙகளை அதிக அளவில பெறறுவிடட தருககோடு திரிந்த வககரன், தன் உடலிலிருந்து ஒரு துளி ரத்தம நிலத்தில் வீழ்ந்தாலும அதுவும ஜீவ சகதியோடு வக்ரனின உருவததைப் பெற்றுவிடும் என்ற நிலையில் 'ரக்த பீஜன' ஆக விளங்கினான். கடடுககடங்காத இந்தத் திமிர, இனி தனனை எவராலும அழிகக முடியாது எனற மனநிலையை

*Statement about ownership and other particulars about*

## SAPTHAGIRI
## (MONTHLY)

**FORM IV**

( *See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | | TIRUPATI |
| 2 | Periodicity of its publication | | Monthly |
| 3 | Honorary Editor | | Sri G. Kumaraswamy Reddy, I.A.S<br>Executive Officer, T T.D |
| 4 | Printer's Name<br>Whether citizen of India<br>Address | . | Sri M. Vijayakumar Reddy, L.P.T.,<br>Yes<br>Manager, T T.D Printing Press, Tirupati |
| 5 | Editor & Publisher's Name<br>Whether citizen of India<br>Address | .. | K Subba Rao, M.A ,<br>Yes<br>Editor, Sapthagiri,<br>T.T.D Journal, Tirupati |
| 6 | Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | .. | Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T D , Tirupati |

*I, K Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief*

TIRUPATI,
*Date*: 29-2-1984.

**(*Sd.*) K. SUBBA RAO,**
*Signature of the Publisher.*

விளைவிக்க, இந்த வனத்தில் தபசு செய்து கொண்டிருந்த முனிபுங்கவர் களையும் பிறரையும் அநியாயமாகக் கொடுமை செய்யத் தொடங்கினன் வக்கிரன். இவனது அழிவே, சாதுக்கள் ஜீவிக்க வழி என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது ஸ்ரீமந் நாராயணன் அருள் வழிப்படி, விஷ்ணு துர்க்கை மஹாகாளியாக உருவெடுத்து இந்த வனப்ரதேசம் முழுதும் தன் நாவைப் படரவிட்டு, திருமால், வக்கரனை மெதுவாக இந்த நாக்குப்ரதேசத்தில் சிக்க வைத்து, தன் சக்ராயுதத்தை ப்ரயோகிக்க, வக்கரனின் குருதி காளியின் நாவால் உறிஞ்சப் பெற, தருக்கிழந்து, நிலை குலைந்து, மரணத் தறுவாயில் வக்கரனின் பிரார்த்தனைக் கிணங்க இந்த வனாந்தரம் பூகம்பத்தினால் கடலில் அமிழ்த்தப் பெற்றுப் பிறகு மீண்டும் அந்த அசுரனின் பெயராலேயே திருவக்கரை எனத் தோற்றுவிக்கப் பெற்றதாம். இந்தப் புராணக் கூற்றுக்கு விஞ்ஞானமும் சாட்சி கூறி மெய்ப்பிப்பதே போல இன்று இந்திய அரசின் புவி இயல் இலாகா (Geological survey of India) இங்கு அதிகார பூர்வமான எனாமல் அறிவிப்புப் பலகையை நிறுவியுள்ளது. அது தரும் தகவல் அப்படியே:

இந்திய அரசு: இந்திய புவியியல்
இலாகா-அறிவிப்பு.
தேசிய பூங்கா-கல்
மரங்கள்-திருவக்கரை

'தமிழ் நாட்டில் தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த திருவக்கரைப் பகுதி-திருவக்கரை கிராமத்திற்கு அருகிலும் அதன் சுற்று வட்டாரங்களிலும் கல் உருவாக மாறிய பெரிய அடிமரங்கள் காவி நிறம் பொருந்திய மட்டரக இரும்பின் இனத்தைச் சேர்ந்த கெட்டிக் கற்களாலான சிறு மேடுகளில் நீண்ட காலமாக இருப்பதைப் பலரும் அறிவர். கல் உருவாகிய சில அடி மரங்கள் முப்பது மீட்டருக்கும் மேல் நீளமும், ஒன்றரை மீட்டர் குறுக்களவும் உடையவை. இக்கல்லுரு மரங்களில் பட்டையோ, கிளைகளோ, வேர்களோ, காணப்படாமையால் இம்மரங்கள கல்லாக மாறு முன்பே இப்பொழுது இருக்குமிடத்திற்கு வரப்பட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது. மேலும் ஆதியில் சாதாரண அடிமரங்களாக இருந்தவை காலப் போக்கில் 'சிலிக்கா' என்னும் மணற் பொருள் ஏறி, மரத்தின் தன்மை முற்றிலும் மாறி, இன்று கல் மரங்களாகக் காணப்படுகின்றன. இவை கல் மரங்களாக மாறின பிறகு, இங்கு மாற்றப்பட்டன என்று கருதச் சான்று ஏதும் இல்லை. ஆதலால் இப்பொழுது அவை எந்தப் பாறைகளுடன் சேர்ந்திருக்கின்றனவோ, அந்தப் பாறைகளின் காலத்தைச் சேர்ந்தனவாகவே இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. புவி இயலின்படி இப்பாறைகள் யாவும் கடல் மணற்கல் தொகுப்பைச் சேர்ந்தவை. ஏறத்தாழ இரண்டு கோடி-ஆண்டுகளுக்கு முன் தோன்றியவை. ஜெமனி நாடுகளில் 18-ம் நூற்றாண்டில் பிரயாணம் செய்த M. சோனராட் என்ற ஐரோப்பிய இயற்கை விஞ்ஞானி தான், இக்கல் மரங்களைப் பற்றி முதன் முதலில் 1781-ல் எழுதியுள்ளார். இக்கல் மரங்களைப் பற்றிய ஆராய்ச்சி பல காலமாக நடந்து வந்

## நன் மனம் அருள்வாய்!

**புலவர் சீனி. இராமநாதன் பி.லிட்,-சேலம்.**

பத்து அவதாரம் எடுத்தாய்!
பக்தர்கள் நாளும் வணங்க
எத்திசை உள்ளோரும் ஏத்த
ஏழுமலை மீதில் ஏறினாய்!
கத்துங் கடலோசை போலவே
காசினி வாழ்வோர் தங்கள்
பத்தியால் உன்னை வாழ்த்திப்
போற்ற நன்மனம் அருள்வாய்!

ஏழைநான் என்றே ஏங்கி
எந்நாளும் பணமதைப் பகைத்து
கோழை உள்ளம் கொண்டே
குறும்புகள் செய்யும் போக்கில்
வாழை மரத்தின் பரம்பரை
வழியில் வந்தவன் ஆயினும்
மோழையில் மூழ்கி விட்டேன்
எனக்குநீ நன்மனம் அருள்வாய்!

கோடானு கோடிப் பேர்கள்
கும்பிட் டுன்னை வணங்குவர்
மாடுபோல் நானும் உன்றன்
மாண்பினை அறியா திருந்தேன்.
தேடிய செல்வம் எல்லாம்
திருமாறே உன்றன் செல்வம்
நாடிய வினைகள் ஆற்ற
நன்மன மதனை அருள்வாய்!

என்கடன் பணிசெய்து கிடத்தல்
என்றே உரைத்தார் அப்பர்
உன்மகன் நானும் உன்றன்
நம்பிக்கைக் குரிய னாகியே
என்றும் உன்றன் இன்குரல்
உட்செவி தன்னில் கேட்க
கன்றிடும் கடமைகள் செய்ய
கனிந்திடும் நன்மனம் அருள்வாய்!

பெண்சாதி பிள்ளை என்றே
பேதைமை கொண்டு திரிந்தேன்.
கண்ணனை உன்னை மறந்தேன்
காசே பெரிதென் றிருந்தேன்
மண்ணாளும் மதிப்புடை வேந்தே!
மரியாதை இழந்தே இருந்தேன்
கண்டுநீ கருத்துட் கொண்டு
இன்றேநீ நன்மனம் அருள்வாய்!

இயற்கையில் தோன்றிய
இன்னமுதே
போரிடும் அரக்கரை அழித்தாய்!
வியக்கவே விந்தைகள் புரிந்தாய்!
வீறுடன் நானும் வாழஎன்
மயக்கந் தனையே நீக்கி
மதிப்புடன்வாழ்ந்திடச்செய்வாய்!
அயர்வறும் அமரர் விளக்கே!
அருள்வாய் நன்மனம் எனக்கே!

துள்ளது. அதன் விளைவாக, இவை கள் 'மீசெம்பிரை யோக் சைலான்ஷ் மிடியேவம்' என்னும் திறந்த விதைத் தாவர இனத்தையும், சில மூடிய விதைத் தாவர இனங்களையும் சேர்ந்தவை எனத் தெரிகிறது. இக் காலத்தில் உள்ள புன்னை மரக்குடும் பம், ஆமணக்குக் குடும்பம், கட் டாஞ்சிக் குடும்பம், முதிரைக் குடும் பம், ஆகியவற்றைச் சேர்ந்த இனங் களும் இந்தக் கல்லுருத் தாவரங்க ளில் இருக்கக்கூடும். புளிய மரத்தை ஒத்த கல் மரமும் இங்கு காணப்படுகிறது. இக்காலத்தில் வாழ்ந்துவரும் தாவர இனங்கள் பல, அந்தப் பழைய காலத்திலும் இருந் திருக்கக்கூடும்.

இந்த திருவக்கரை பாடல் பெற்ற ஸ்தலம். திருஞான சம்பந்தரின் பாடலைப் பெற்றிருப்பதால் 1,300 ஆண்டு கட்கும் முந்தைய சிறப்பைப் பெற்றது என்பதை அறியலாம். முத லாம் ஆதித்த சோழன் திருப்பணி, முடிச்சோழன் கண் பிராதித்தமா தேவியான செம்பியன் மாதேவியின் திருப்பணி, முதலாம் இராஜராஜ சோழன் திருப்பணி முதலியவற்றுக் கான கல்வெட்டுக் குறிப்புகள் நிறைய இருக்கின்றன. இந்த ஆல யத்தின் முருகன் சந்நிதிக்கு அருண கிரி நாதர் வந்து வணங்கி 'கலக லைச் சில கலைகள்' எனத் தொடங் கும் திருப்புகழை அருளியுள்ளார். ஸ்வாமி பெயர்: சந்திரசேகரர். அம்மன் பெயர்: வடிவாம்பிகை. இந்தசிற்றூர்சமுத்ரக்கரையிலிருந்து 13 மைல்களுக்கு அப்பால் இருந் தாலும், இந்த கிராமம் நெடுகிலும் விழுந்து கிடக்கும் கல் மரங்களின் உள்ளும், புறமும், பொதிந்து புதைந்து இருக்கும் Fossils கடலின் அடி ஆழப்பகுதிகளில் மட்டுமே இருக்கக் கூடியவை என்பதால் இந்தப் பகுதி கோடிக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் காட்டு ப்ரதேச மாக இருந்து பின் கடலால் கொள் ளப்பட்டு லக்ஷக்கணக்கான ஆண்டு களுக்குக் கடலடியில் அமிழ்ந்த நிலப் பகுதியாக இருந்து பிறிதொரு சமயம் ஏற்பட்ட நில நடுக்கத்தினுல் வெளி வந்திருக்க வேண்டும் என இந்த பிரதேசம் குறித்து ஒரு விஞ் ஞானக் குறிப்பு உணர்த்துகிறது. ஒரிஸ்ஸாவின் கோனூர்க்கில் உள்ள சூர்யனூர் கோயில் ரத மாதிரியில் இந்த ஆலயத்தில் சூர்யன் திருமண் டபம் என்ற நூற்றுக்கால் மண்டபம் ஒன்று ரத வடிவில் பிரமிப்பூட்டும் வடிவமைப்பில் உள்ளது. மண்டபத் தையே இரு பக்கமும் இரு சக்கரங் களுடன் கூடிய ரதம்போல அமைத்து இந்த நூற்றுக்கால் மண்டப ரதத்தை இரு புரவிகள் இழுத்துச் செல்வது போல கட்டியிருக்கும் சிற்ப வேலைப் பாடு மிக அரிதான ஒன்றாகும்.

இந்தத் திருத்தல இறைவனை உமா பதி சிவாசாரியரும் பாடியுள்ளார். இன்றும் கூட இந்த சிற்றூருக்குச் சென்று திரும்ப, சரியான, போதிய போக்குவரத்து வசதிகள் இல்லாத நிலையில், ஒவ்வொரு பௌர்ணமி இரவும், இந்த வக்கர காளி பூஜைக்கு மக்கள் ஆயிரக்கணக்கில், நடந்தும், மாட்டு வண்டிகளிலும், டூரிஸ்ட் பஸ் களிலும், கார்களிலும், சைக்கிள் களிலுமாக திரள்திரளாகக் கூடிக் குழுமி, இந்த சின்ன ஊரையே படை யெடுக்கும் காட்சி நேரிற் பார்த்து வியக்க வேண்டிய ஒன்றாகும். பௌர் ணமிப் பருவ 'காளி பூஜை' இரவு நடுநிசியையும் தாண்டுவது குறிப் பிடப் பெற வேண்டிய ஒன்று.

'' சந்திர சேகரனேஅரு ளாய்என்று
தண்விசும்பில்
இந்திரனும் முதலாம் இமையோர்
கள் தொழுதுஇறைஞ்ச
அந்தர மூவெயிலும் அனலாய்விழ
ஓர்அம்பினால்
மந்தர மேருவிலலாய் வளைத்தான்
இடம் வக்கரையே''

— திருஞான சம்பந்தர் பதிகம்.



# ஏன் 3 தடவை சொல்ல வேண்டும்

**திரு. பி. கலாநிதி-பாபநாசம்.**

பக்தன் ஒருவனுக்கு குருநாதர் 'இராம' நாமாவை உபதேசித் தார். திடீரென பக்தனுக்கு 'இராம' நாமாவை குருநாதர் 3 தடவை சொன்னாலே போதுமென்று சொன்னாரே. ஏன் நாமாவை ஒரு தடவை சொன்னாலே போதாதா என்று சந்தேகம் வந்தது. குருநாதரை அணு கினான்.

அவர் கூறியதாவது :

''ஒரு மனிதனை பாபங்கள் 3 வழிகளில் வந்து சேருகின்றன: தன்னாலும், தன் உறவினர்களாலும், முன் ஜன்ம வினையாலும் ஆகிய மூன்று வழிகளில் மனிதனைப் பாவங்கள் பற்றுகின்றன.

தன்னால் ஏற்பட்ட பாவத்தையும், முன் ஜன்ம பாவத்தையும், தன் உறவு மூலம் ஏற்பட்ட பாபத்தையும் போக்கிக் கொள்ள 'இராம' நாமாவை மூன்று தடவை சொல்ல வேண்டும்'' என்று குரு விளக்கினார். மனிதன் காரணம் அறிந்து உவகையுடன் மூன்று முறை மந்திரம் ஜபிக்க லானான்.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—5.

மனித வாழ்வின் இலட்சியமான இறைநிலையைப் பற்றி பகவான் மேலும் விளக்கம் தருகிறார்.

ந தத்பாஸயதே ஸூர்யோ
ந சசாங்கோ ந பாவக ।
யத் கத்வா ந நிவர்த்தந்தே
தத் தாம பரமம் மம ॥ (15-6)

'எங்கே சென்றவர்கள் திரும்பி வருவதில்லையோ, எதை சூரியனும் சந்திரனும் அக்கினியும் விளக்க மாட்டாவோ அதுவே எனது பரமபதம்.'

பகலில் பொருள்களை விளக்குவது சூரிய வெளிச்சம். இரவில் அது இல்லாத பொழுது சந்திர ஒளியால் நாம் பொருள்களைக் காண்கிறோம். அமாவாசை இரவில் சூரிய ஒளியும் சந்திர ஒளியும் இரண்டுமே இல்லாத நிலையில் நட்சத்திர ஒளியால் பொருள்களை ஓரளவு உணர்கிறோம். இவ்விதம் நாம் பொருள்களை உணர மற்றொன்றின் துணை தேவையாயிருக்கிறது. செயற்கையாக நாம் விளக்கைப் பயன் படுத்துகிறோம். பொருள்கள் இருப்பதை விளக்குவதால்தான் 'விளக்கு' என்ற பெயரே வந்தது.

ஓர் இருட்டுஅறை. அதற்குள் நான் தனியே அமர்ந்திருக்கிறேன். கதவு உட்புறமாகத் தாளிடப்பட்டிருக்கிறது. வெளியேயிருந்து யாரோ ஒருவர் கதவைத் தட்டி 'உள்ளே இருப்பது யார்? என்று கேட்கிறார். 'நான்தான்' என்று நான் பதில் அளிக்கிறேன். அங்கே என்னைவிளக்க எந்தவித புற வெளிச்சமும் கிடையாது. 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வு ஒன்றுதான் அங்கே எஞ்சி நிற்கிறது. இந்த உணர்வை சூரியனோ சந்திரனோ எதுவும் விளக்க மாட்டா. சூரிய ஒளியால் விளக்கப் பெறும் பொருள்களை நாம் நம் கண் கொண்டு பார்க்கிறோம். எனவே அதிதேவதை சூரியன் எனப்படுகிறது. சந்திரன் மனத்தில் அதிதேவதை. அதுபோல வாக்கின் அதிதேவதை அக்கினி. கண்ணால் பார்க்க முடியாத பெருநிலை அது என்று இங்கே குறிப்பிடப்படுகிறது. 'न चक्षुषा पश्यति कश्चिदेनं', 'न तत्र चक्षुर्गच्छति', यं मनसा न मनुते', 'यद् वाचा नभ्यु दितम्'—என்ற உபநிடத வாக்கியங்கள் இந்தக் கருத்தையே வலியுறுத்துகின்றன.

நமது ஆலயங்களிலே பூஜையின் முடிவிலே கற்பூரத்தைக் கொளுத்தி ஆரத்தி காணபிப்பது வழக்கம். அப்பொழுது கடோபநிஷதத்தில் உள்ள ஒரு மந்திரம் சொல்லப்படுவது உண்டு.

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम्
नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं
तस्य भासा सर्वमिदं विभाति ॥

''இறைவா! நீயோ அருட்பெரும் ஜோதி. ஒளியின் பிறப்பிடம். உன்னை சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் போன்ற எதுவுமே விளக்க மாட்டா. அப்படியிருக்க நான் காட்டும் இந்தச் சிறிய தீபமா உன்னை விளக்கப் போகிறது. நீ சுயம் ஜோதி வடிவினன. உன்னால் அனைத்தும் ஒளியைப் பெறுகின்றன'', என்பது மேற்காணும் மந்திரத்தின் கருத்து ஆகும். இதே கருத்து சுவேதாஸ்வர உபநிடம் (6-14) மற்றும் முண்டக உபநிடதம் (2-2-10) பகுதிகளிலும் காணப்படுகிறது.

நமது ஐம்புலன்களும் வெவ்வேறு தொழிலைச் செய்தாலும் அனைத்திற்கும் 'பார்த்தல்' என்பது பொதுவானதாகும். காதால் 'கேட்டுப் பார்த்தல்' மூக்கால் 'முகர்ந்து பார்த்தல்' கையால் 'தொட்டுப் பார்த்தல்' மனதால் 'நினைந்து பார்த்தல்' நாக்கால் 'ருசித்துப் பார்த்தல்' என்று நாம் சொல்லுகிறோமில்லையா; பார்த்தலுக்கு ஒளி தேவை. கனவில் நாம பொருள்களைப் பார்க்கிறோம். எதனால் மனத்தினுள், உள்ளொளியின் துணைகொண்டு. இது தவிர சாதனையின் போது ஒரு நிலையில் வெவ்வேறு ஒளி வட்டங்களையும் நாம் காணகிறோம். அவற்றை உள் உணர்வாகிய ஒளியின் துணைகொண்டு நாம் காணகிறோம். அந்த உள் உணர்வை புற உலக ஒளி எதுவும் விளக்க இயலாது. அந்த உள் உணர்வே ஒளி தரும் அனைத்துக்கும் ஆதாரமாகும்.

ஆன்ம சாதனை என்பது இரட்டை முனைக் கத்தியின் மீது நடப்பதற்கு நிகர் என்று அடிக்கடி ஸ்ரீசுவாமி சிவானந்தா குறிப்பிடுவார். வழுக்கலான கம்பில் ஏறுபவன் பலமுறை கீழே வழுக்கி விழுவது போல இதில் எத்தனையோ தடவைகள் தொல்லைகள் ஏற்படலாம். இருந்தாலும் ஒருவன் தொடர்ந்த சாதனையில் ஈடுபட வேண்டும். இப்பொது சாதகனின் மனதில் ஒரு ஐயம் ஏற்படலாம். இவ்வளவு கஷ்டப்பட்டு ஒருவன் பெறற்கரிய பெருநிலையை அடைந்து விட்டான் என்று வைத்துக்கொள்வோம். அதன் பின்னர் அவனது நிலை என்ன, மீண்டும அந்த நிலையிலிருந்து வீழச்சி ஏற்படுமா, அல்லது அதிலேயே இருப்பானா என்பதுவே அந்த சந்தேகம். அதற்கு பகவான் இந்த சுலோகத்தில் பதிலளிக்கிறார்.

'யத் கத்வா ந நிவர்த்தந்தே'—எங்கே சென்றபின் ஒருவன் திரும்புவதில்லையோ, அதுவே பெருநிலை... அதுவே எனது நிலையுமாகும் என்று பகவான் கூறுகிறார்.

ஒருவன் சாதாரண உலக வாழ்க்கையில் ஏதாவது ஒரு கலையில் மிக உன்னதமான தேர்ச்சி

# 'ஸப்தகிரி' விற்பனைப் பிரதிநிதிகள்

ஆா சமபதகுமார்,
பிளாட எண. 56.
எஸ. எம் இ. எஸ. சி. காலனி.
அபிஷேகபுரம,
திருசசி - 620021

தினமணி ஸடோாஸ,
புக செலலாஸ &
நியூஸ ஏஜெணட்,
81, பழைய போஸட ஆபீஸரோடு,
கோயமபுத்தூா - 641018.

எஸ். என. கிருஷணயய சாமா,
கிருஷ்ணு நேம பிளேட் மேக்காஸ்
10/354. A சினனக்கடை பஜார்.
பரமகுடி - 623707
ராமநாதபுரம மாவட்டம.

ஏ கோவிநதராஜன்,
152 B, திரு. வி க சாலே.
விழுபபுரம - 605602

பி. பி. குப்பராஜு,
154, பழைய சப் ஜெயில் ரோடு,
தெளலாபாத்,
கிருஷணகிரி - 635001.
தாமபுரி மாவடடம.

ஏ. டி. கிருஷணன,
(ஸடாணடர்டு மோட்டாா
78, பஜாா் ரோடு, கம்பெனி)
மைலாப்பூர், சென‍னை - 600004.

ஸ்ரீமதி ஏ. வனஜாகிருஷணமூர்ததி
46. பழனிஆணடவா கோயிலதெரு
கொஸபாளையம.
ஆரணி – 632301.

சி. எச். லக்ஷ்மிபிரஸாதராவ,
25, வெங்கடராம நாயுடு தெரு,
பெரம்பூர்,
சென‍னை – 600011

டி. பாபு,
75, போஸ்ட ஆபீஸ தெரு,
சோளிஙகா.
வ. ஆறகாடு மாவடடம.

வி. கணணசுவாமி முதலியார்,
நேஷனல புகஸ ஸடோர்ஸ
பாரத தெரு,
(நேரு தெருவுககு அருகில்),
பாண்டிசசேரி - 1

டி. ஆா; முரளி கோபால
44, சனனதி தெரு,
திருவலம — 632551.
வ ஆ. மாவடடம.

குமாரி பி. ஜெயநதி,
விஜயா பவன
பிளாட எண 42, 2 வது பிரதான
டி.டி. கிருஷணமாசசாரிநகா [சாலே
தாம்பரம போஸட,
இருமபுலியூா—600045.

பி. இ. மாாககசகாயம,
137, பிரதான சாலே,
பேரூர் அஞசல
கோயமபுததூா—641010

டி. எம. ரஙகபப செடடி,
நியூஸ ஏஜெணட
ஹோசூா—63510
தா்மபுரி மாவடடம.

டாகடா கே. கிருஷணன,
சன்னதி தெரு,
திருவள்ளூா—602001
செஙகறபட்டு மாவடடம்.

சி. எம். ஏ. பாசசியணணன்,
17-10, பாவடி தெரு,
திருச்செஙகோடு—637211

டி. இ. நரசிமமாசாரி,
எண 5, 30 வது தெரு (மேல்மாடி)
நங்கநல்லூா,
சென‍னை—600061

எம. வெங்கடப்பா,
யேமினி பிலடிஙஸ,
195. J. பாரதியாா ரோடு,
கோயமபுத்தூா—641044.

எஸ திருமலே
103, திருபபததூா ரோடு,
தேவகோடடை,
கோடடை—623302
ராம்நாத் மாவட்டம.

கே. எஸ. ஸ்ரீநிவாசன,
c/o. அமாஜோதி ஸடோர்ஸ,
தேவராம்—626530

கே. வேணுகோபால,
241, ஆததூர் பிரதான சாலே,
ஸ்ரீ சித்தி விநாயகா கோயில்தெரு,
நாமகிரிப்பேட்டை,
சேலம் மாவட்டம—637406

திருமதி. இ. லக்ஷமிபாய்,
எம வன்னஜா்,
ஸோமநதாகுடி—606210
களளககுறிச்சி தாலுககா,
தெ. ஆ. மாவட்டம

வி. ராத்கிருஷண ஐயா,
சஙகரமடம,
கலவி—632506

ஏ. பெருமாள்,
46 எண் 1, காலரமபட்டி,
பிரதானசாலே,
குகை—636006
சேலம மாவடடம

எம. கணபதி,
47, F. சுபபயய பவன,
மீனுடசிபுரம்,
நாகாகோயில—629001

எம. கே. வெஙகடேசன்,
6, கோயில,
ஸ்ரீரஙகம், திருச்சி—6

என். டி. ராமானுஜன்,
என. டி. ஆா. பிகசர்ஸ & புகஸ,
பிராதனசாலே.
மேட்டுப்பாளையம்—641301

கே. கோவிநதராஜ,
கீளையூா—605753
137, தெற்குத் தெரு,
திருககோயிலூா தாலுக்கா,
தெ. ஆ. மாவட்டம

பி. அகோரம,
28, விஜிதிராயர் தெரு,
பாலககரை,
மாயூரம—609001

திருமதி. ஆா. படடமமாள்,
41, காணகொலலே அகரஹாரம,
குமபகோணம—612001

வி. வி. ரஙகசுவாமி,
6-14-140 கோடடூா ரோட்,
பாளையம கோடடை, (ஆா.எஸ.)
திருநெலவேலி—627002

பி. கே. சுநதரராஜன,
21, முராரி வரதஐயா தெரு,
சேலம்—636001

எஸ். ஸ்ரீகணட ஐயா,
குளேமேடு.
7/114, பி. செல்லயாண்டி
அம்மன கோயில் தெரு,
19 வது பிளாக்,
மேட்டூா அணை—636401.

(தொடாச்சி 36-ம் பக்கம் பார்க்க)

பெற்று விட்டால் பிறகு அந்தப் பெருநிலையிலிருந்து கீழே வர இயலாது. உதாரணமாக நல்ல தேர்ச்சி பெற்ற பாடகர் ஒருவர் எவ்வளவு தான் முயன்றாலும் ஸ்வரம் தவறிப் பாடமாட்டார். அவரால் அபஸ்வரத்தில் பாட முடியாது. நல்ல மொழித் தேர்ச்சி உடையவரால் அந்த மொழியில் தவருகப் பேசவோ எழுதவோ இயலாது. இது எல்லாக் கலைகளுக்கும் பொருந்தும். அது போலவே அத்யாத்மிக வாழ்விலும் பெறற்கரிய பெருநிலையை அடைந்தவன் அதிலிருந்துகீழே வழுவுவதில்லை என்று பகவான் கூறுகிருர். அதாவது யோகப் பயிற்சியால் இறைவனுடன் இரண்டறக் கலந்தவர்கள் மீண்டும் பிறப்பெடுப்பதில்லை. இந்த நிலையை அடையும் வரை ஒருவன் பிறந்து இறந்து கொண்டே இருக்க வேண்டும். ஆனல் ஞானத்தினல் யோகத்தால் இறைநிலையை அடைந்தவர்கள் ஜீவன் முக்தி எனப்படும் பிறவாப் பெருநிலையை அடைகினறனர்.

மரணம் நமது இப்பிறப்பில் முடிவு அல்ல, அது அடுத்த பிறவிக்கான ஒரு தொடர்ச்சி எனபது ஹிந்து மதத்தின் கருத்து. ஆனல் ஏனைய சில சமயங்கள் மனிதனுக்கு உள்ளது ஒரே பிறவி, மரணத்துடன் அவனது வாழ்வு முற்றுப் பெறுகிறது என்று கூறுகின்றன. இதை விளக்கும் வகையில பகவான் இனி வரும் சில சுலோகங்களில் சில அரிய கருத்துக்களைக் கூறுகிருர்.

மமைவாம்சோ ஜீவலோகே
ஜீவபூத꞉ ஸநாதன꞉ |
மன꞉ ஷஷ்டானீந்த்ரியாணி
ப்ருக்ருதிஸ்தானி கர்ஷதி॥ (15-7)

'எனது அம்சமே எக்காலத்தும் ஜீவனுகத் தோனறி ஜீவ லோகத்தில பிரகிருதியில் நிற்கின்ற மனம் உட்பட ஆறு இந்திரியங்களை (போகத்தின்) இழுக்கிறது.

இந்த சுலோகத்தில் ஜீவனைப் பற்றிய விளக்கம் தரப்படுகிறது. சென்ற சுலோகத்தில் பிரம்மஞானத்தால் ஜீவாத்மா பரமாத்மாவுடன் லயமாகிறது. அதுவே பெறற்கரிய பெருநிலை, அதன்பின் ஜீவன் மீண்டும் பிறப்பெடுப்பதில்லை என்று கூறப்பட்டதல்லவா. அப்படியானல் ஜீவன் பரம் பொருளிலிருந்து வேறுயிருந்து பின் லயமாகிறதா என்ற கேள்வி எழலாம் அல்லவா? அதைப் போக்கும் வகையில் ஈண்டு பதில் வருகிறது.

'ஸநாதன꞉ மம ஏவ அம்ச꞉' (ஜீவன்) என்றென்றும் எனது அம்சமே. 'ஸநாதன;' (என்றென்றும்) என்று சொல்லுவதானது எப்பொழுதும் ஜீவன் பரத்துககு உரியதே என்பதைக் குறிக்கிறது. அது ஜீவனுக இருக்கும் பொழுதும் பரமாத்ம சொருபமேயாகும். பரமாத்மனுக்கு வேருக இருந்து பிறகு அதில் கலத்தல் எனபது அலல. வானத்தில் சூரியன் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. கீழே பூமியில உள்ள ஒரு குடத்து நீரில் அதன் பிம்பம தெரிகிறது. சூரியபிம்பத்தை பிம்பமாகப் பார்க்கினற வரையில் பிம்பம் வேறு, சூரியன் வேறுதான். ஆனல் குடம் உடைந்து அதிலுள்ள நீர் வெளியேறி விடுகையில் பிம்பம என்ன ஆகிறது? பிம்பம் சூரியனுடன் ஒன்றி விடுகிறது. பிம்பம் சூரியனிலிருந்து தனியாய் இருநது பின் ஒன்று சேர்ந்ததா? இல்லவே இல்லை. சூரியனும் பிம்பமும் வேறு அலல. குடம், நீர் என்ற பொருளகளின் (உபாதிகளின்) சேர்க்கையினல் சூரியன் பிம்பமாகத் தென்பட்டது. இவை இல்லாததாகின்றபொழுது எஞ்சுவது சூரியனே. பிம்பம் என்றுமே சூரியனிடமிருந்து வேறுனதல்ல. இதுபோலவே அறியாமையின் விளைவாகத் தோன்றிய உடலாகிய உபாதியினல் ஜீவன் பிரம்மத்திலிருந்து வேறுனது போலத் தென்படுகிறது. அறியாமைத்தளை அகன்று பிறவித் துன்பம் நீங்கும் போது சூரிய பிம்பம் சூரியனில் ஒன்றுவது போல, ஜீவன் பரம்பொருளில் லயமாகிறது.

பானைக்குள் உள்ள ஆகாசம் அல்லது வெளி கடாகாசம் என்றும், அதற்கு வெளியே பரநது உள்ளது மஹாகாசம் என்றும் கூறப்படுகிறது. ஆகாசம் ஒன்றுதான். ஆனல் பானை என்ற உருவத்தினுள் அடைபட்டிருப்பதால் அது கடாகாசம் (கடம் என்றல் பானை) என்று கூறப்படுகிறது. பானை உடைகின்ற பொழுது கடாகாசம் மஹாகாசத்துடன் லயமாகிறது என்று சொல்லுவது சரியா? இல்லை. அது பிரிந்தால் தானே சேருவதற்கு? பானை என்ற உபாதி அகன்றது. அவ்வளவுதான். பானை உருவாவதற்கு முன் ஒன்றித்திருந்த கடாகாசமும் மஹாகாசமும் பானை உடைநத பின்னரும் அதே நிலையில் உள்ளன. இந்த உபாதிக்கு ஆங்கிலத்தில் 'Limiting adjunct' என்றுபெயர்.

கோடிக்கணக்கான சூரிய பிம்பங்கள் தோன்றினும மறைந்தாலும் அதனல் சூரியனுககு ஏதாவது குறை ஏற்படுமா? கிடையாது. அதுபோல எத்தனை கோடி ஜீவர்கள்-தோன்றினுலும் அதனல் பரம்பொருளுக்கு குறைவு ஏதும் கிடையாது. அது என்றும் குன்றாப் பூரணப்பொருள்.

வாளியில் உள்ள நீரில் தெரிகின்ற சூரிய பிம்பம் நீரின் அசைவால் குதிப்பது போலவும், உடைவது போலவும் தென்படும. எல்லாம் வெறும் தோற்றமே. அது போல அறியாமையில் கட்டுண்டிருக்கும் ஜீவன் தான் இன்பதுன்பங்களுக்கு உட்படுவது போலவும், இகழ்ச்சி புகழ்ச்சிகளுக்கு ஆளாவது போலவும் கருதுகிருன். பிரகிருதியின் சேர்க்கையினல் ஜீவனுக்கு இந்திரியங்கள் உண்டாகின்றன. புறவுலகை அனுபவிப்பதற்காக வென்று அவை உருவானவை. மனம், இந்திரியங்களுடன் தொடர்பு கொண்ட நிலையில் ஜீவன் போகி என்று அழைககப்படுகிருன். அவற்றுடன் தொடர்பு அற்ற நிலையில் அவன் யோகி ஆகிருன். பிரகிருதியுடன் வைத்த தொடர்பால் ஜீவன் கர்த்தா (செய்பவன்) போக்தா (அனுபவிப்பவன்) என்றெல்லாம் அழைக்கப்படுகிருன்.

புலன்கள் ஐந்து: மெய், வாய், கண், மூககு, செவி என்பன. இவற்றுடன் மனமும் சேருகின்ற பொழுது அநத ஐந்து இநதிரியங்களும் செயல்பட ஆரமபிககின்றன. பொருளை அனுபவிக்க இவை தேவை. மனத்தைப் பொருளிலிருந்து பிரித்து பரம்பொருளில் லயிக்கச்செய்துவிட்டால் அதுகாறும் ஜீவன் பெற்று வந்த போகம் முற்றுப்பெற்று அதுயோகம் ஆக மாறி விடுகிறது. ஜீவ போதம் இருக்கின்றவரை ஜீவன் எனறு அழைக்கப்பட்டவன் அது அற்ற பொழுது பரமாத்மாவாகிருன். புலன்கள் அடங்க அடங்க மனிதன் உயர்நிலை அடைகின்றன்.

(தொடரும்)

வி. திருவேங்கடம் நாயுடு,
73, கலே முததுப்பிளளே சநது,
திண்டுக்கல் – 624001

என். வி. சாரி,
பெருமாள் கோயில அர்ச்சகா
கோடடை,
ஈரோடு – 638001

என. வாசுதேவபிரபு,
X/584, அமராவதி,
கொசசி – 1

திருமதி. கே. ராஜேஸ்வரி,
32, பிராமணாள் தெருவு,
நாயுடுப்பேடடை,
குடியாத்தம – 632602

ஏ. பாலசுபரமண்யம
27, பெரியாணடர் கோயில்தெரு,
போடிநாயககனூர் - 626513

எம. வீரபாபு,
19, தெறகுத்தேர் வீதி,
ஆழ்வாா திருநகரி - 628612

டி. ச. நரசிம்மாசாரி
34, அழகேஸ்வர் வீதி,
வி. நகர்,
செங்கல்பட்டு - 603001

ஏ. ஜி. பழனிவேலு,
ஸ்டாம்பு வெணடாா
அரகணடநல்லூர் அஞசல்,
தெ. ஆ. மாவட்டம்-605752

எம். வெங்கட்ராம ஐயர்,
8, நாராயணசுவாமி கோயில் வீதி,
தோட்டபாளையம்
வேலூர் – 632004

ஆர். புருஷோத்தமன,
56, தானிய பஜார்,
ஆத்தூர் – 636102
சேலம் மாவட்டம்.

ஆா. முத்துக்கிருஷ்ணன்
நவநீத கிருஷ்ண லாலா
இனிப்புக் கடை,
(பேருந்து நிலையம் அருகில்)
சங்கரன் கோவில்

ஏ. ரஙகராஜு
12, திருவளளுவர் வீதி
பலலாடம் – 638664

திருமதி. ஷணபகவல்லி
திருவேங்கடாச்சாரி,
12, சிவ்கசிந்தாமணி தெருவு,
லக்ஷ்மிபுரம-ஸ்ரீநிவாசநகர் அஞசல்
பெருங்களத்தூா,
சென்னே – 600063

டி. ஏகாந்தலிங்கம,
69, முதல தெருவு,
வடபுதுகிராமம,
கோவில்பட்டி–627701
திருநெல்வேலி மாவடடம்

திருமதி மோகனு வெங்கடாச்சாரி,
மோகன் பவன
பிளாட 26,
வீடடு எண் 3B, 6-வது தெருவு,
தில்லேகங்காநகா
நங்கநல்லூர் அஞசல்
பழவநதாஙகல,
சென்னே—600061

வி. பழனி சுவாமிகௌண்டர்
16/71W பிரதான சாலே
வள்ளியானே அஞசல்
கருா தாலுககா

திருமதி. சுந்தரி பார்த்தசாரதி,
ஸ்ரீ ஆனந்தவல்லி நிலேயம
3, புஜஙகராவ தெரு,
ராதாநகா, குரோம்பேட்டை,
சென்னே — 600044

கே. சந்தானம,
பழைய அகரஹாரம
மாயூரம - (RMS) 609105

டி. ஆர். ரமேஷகாநதி,
ஏ. பி. டி. பார்சல் ஆபீஸ்,
சிபகாட்—ராணிப்பேட்டை
வ. ஆ. மாவட்டம் 632403

திருமதி. ரேவதி ஸ்ரீநிவாச
கோபாலன்
பிளாட்: 63, எண்.9,
3-வது பிரதான சாலே
அணணாநகர், பமமல் (அஞ்சல்)
சென்னே–600075

பி. கே. கேசவன்,
2, எம். எம். எம். ரெட்டிதெருவு
ஜோலார்பேடடை – 635851

கே ஸ்ரீநிவாசன்,
7, திருகணேசம் பணடர் தெருவு,
சீர்காழி – 609110

பி வி. அய்யம்பெருமாள்,
546, பிரதான சாலே,
பவானி – 638302

வி. பி. தாமோதரன்,
15, பெருமாள கோயில் தெருவு,
வேலபபாடி,
வேலூர் – 632001

ஜெ. ஸ்ரீநிவாசன்,
42 டி. தணடபாணிநாடார்தெருவு
பொன்னேரி – 601204

சோலேராஜா,
339, மேற்கு பிரதான சாலே,
தஞசாவூர் – 9.

வி. கிருஷ்ணமூாத்தி,
345, ஆறகாடு ரோடு,
கோடம்பாக்கம்
சென்னே – 600024

கே. ஏ. கிருஷ்ணன்,
20, ராமனுஜன் தெருவு,
கோபிசெட்டி பாளையம்-638452

டி. என். கிருஷ்ணன்,
கலேயாா கரிசல் குளம,
அருப்புககோட்டை தாலுககா,
ராமநாத மாவட்டம–626105

டி. கே முனிரததினம்,
7–ஏ காவேரி தெருவு,
திருக்கழுககுன்றம் – 603109

எம. எஸ. ராமன்,
சி. 11, பிளாட்ஸ்,
பிரசாத நகா,
புதுதில்லி – 110005

ஏ. ஜெ. சேதுராமன்,
28, அகரஹாரம் தெருவு,
சிந்தாத்ரிபேட்டை.
சென்னே – 600002



# திருவேங்கடமலை வரலாற்று மாலை

அதன் பிறகு பகவதராமாநுஜ முனிவா—அடுதத வெள்ளிககிழமை யிலேயே திருமஞ்சனகாலததில முதலில திருமுடியில சோககபபடுகின்ற ஆகாசகஙகா தீர்த்தததிலை ஸ்ரீநிவாஸ பகவானுடைய திருநெற்றியில் ஸமாபபிககபபடடிருநத திருநாமததின் இருகோடுகள அழிநது மறைநதபோதிலும, அதறகுக கீழப பகுதியாகத திருமூககினடியில அரைசசநதிரவடிவமாக ஸமாபபிககபபடடிருநத திருநாமபபகுதி மட்டும அழியாதிருக்க அதைக கணடு, முனபு (கடல கடைநதபோது) மோஹிநீவேஷந தாஙகிய இபபெருமானுககு, 'பெணகள் அரைச சநதிர வடிவமுளள திருநாமததை இருபுருவஙகளுககுக கீழே (மூககினடியில) தரிககவேண்டும' என்ற வஸிஷ்டஸம்ஹிதாவசனததினபடி அபபோதைய பெணணின நிலைமைககுத் தகக ப படிபபட்ட திருநாமம அஙகிருநத தேவாககும அசுராககும எஙஙனம மையலையூட்டியதோ, அஙஙனமே உலகோா அனைவரையும் மையலேறறி மயககும திவயமஙகளத திருமேனியையுடைய இநத ஸ்ரீநிவாஸனுககும மேறகோடுகள அழியபபெறறு மூககின அடியில மட்டும அழியாது விளஙகுகின்ற அரைச சநதிர வடிவமுளள திருநாமமூலபபகுதியானது பேரழகை ஊட்டுவதாகவும பகதாகளின கணகளையும மனஙகளையும் கவாவதாகவும காணபபடுகிறது. ஆகையால இவவளவேயான திருநாமமும சிலநாட்களில பெருமாளுககுச் சாததுவிககவேணடுமென்று கருதிககொணடிருககும போது, அஙஙனமே ஆசசாா மூலமாக (பகவானால்) நியமிககபபட்டவராய, திருமஞசனம முடிநத பிறகு முனபிருநதபடியே பசசைக கருபபூரபபொடியினால பாததநதோடு கூடிய இருகோடுகளின வடிவமுளள திருநாமததை மூககினடிபபகுதியிலிருநது கேசம வரையில நெறறியில சாததசசெயது', 'இனிமேல எப்போதும வெளளிககிழமை முதல மூனறு நாட்கள இபபடியே திருநாமம அணிவிகக வேணடுமென்றும,

அதறகுப பிறகு 'முதலாம கிருதயுகத்தில ஜமபூதவீபததில் பாரத நாட்டில் கஙகைககுத தெறகே நூறுயோஜனை தூரததிலும கிழககுக கடலுககு மேறகே ஐநதுயோஜனை தூரததிலும உளள நாராயணகிரியில (திருவேஙகடமலையில) செல்வத்திறல உயாநத ஸ்வாமி புஷ்கரிணியின மேறகுக கரையில, தேவர் கணஙகளினால பிராாததிககபபட்ட லோகரக்ஷகனான புருஷோததமன புரட்டாசி மாதம சரவணததுடன கூடிய துவாதசியில திஙகட்கிழமை ஸிததயோகததில ஸ்ரீநிவாஸபகவானாகத தோனறினான்'' என்று 33 எணகுறிதத பாதமபுராணததின பததாமததியாயததிலுளள ஸ்ரீநிவாஸனது தோறறததை வருணிககும் வசனஙகளில திருவேஙகடநாதனுடைய திருவவதார நனனாளாக அறியபபடுகிற திஙகட்கிழமை முதலாக மூனறு நாட்கள மேலிரணடுகோடுகளில்லாமல் அரைசசநதிரவடிவமாக மூக்கினடியில தரிககப்படும திருநாமப பாததததை மட்டும சாததி, அதன் மேல் நெறறியில மஞசட்பொடியாலான செநநிறமுடைய ஸ்ரீசூாண ரேகையை, நெறறியின கோடியில (கிரீடததின கீழ) குறுககாகச் சாத்தபபட்டிருககும் நவரததினஙகளிழைதத திருநெறறிபபட்டமெனனும் திருவாபரணததைத் தொடுமபடியாகவும, அபபட்டததிலிருநது மூக்கின மூலம வரையில் தொஙகுகினற பெரிய வெணமுததுவடங்களாகிய இரணடு கோடுகளாலே அழகு செயயபபட்ட இரணடு பககஙகளையுடையதாகவும, மேலெழுப பாாததால பாததந்தோடு கூடிய மூனறுகோடுகளாலான திருநாமமிருநதாலொதத

---

திரு தி. அ கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான.
திருபபதி.

---

அழகையுணடாககும்படியாக நேராகச் சாத்தி, முறகூறிய மோகினியின நிலைககுத் தககபடி குளிாநதபொருளகளாலே திருககண்களில் அஞசனம் (மை) அணிவிகக வேணுமென்றும,

அதன்பின்பு வியாழககிழமையில், மறுநாள் நடைபெறவிருக்கும் திருமஞசனத்திறகுப் பூாவாஙகமாக ஸகலாபரணஙகளையும களைநது, பெருமாளது திருநெறறியில் திருநாமததை—தஙகததில வைரமணிகளிழைததுச செயயபபட்ட பாதமும் இருகோடுகளும் அஙஙனமே பதமராக ரததினஙகள(கெமபு) அழுததியமைககபபெற்ற ஸ்ரீசூாண

---

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

---

ரேகையுமகொணட திருவாபரண ரூபமாகவே அணிவித்து, திருமுக மணடலம தவிர மற்ற திவ்யாவய வஙகள அவறறிலுள்ள திருவாபர ணங்கள் இவற்றின ஸதானததில புஷபகவசம (பூலஙகி) திருமேனி முழுதும மறையும்படியாக ஸமாப பிககவேணுமெனறும,

அதனமறுநாள வெளளிககிழமை காலையில் திருவாபரணரூபமான திரு நாமததையும் புஷபகவசததையும களைநது வெணணிறத திருமண ஸ்ரீசூரணம இவறறால திருநாமம சாததி, திருவரையிலும திருத் தோளகளிலும வேஷடியும் உத்தரீய முமாக மெலலிய இரண்டு வஸதிரங களை அணிவிதது முதல்திருவாராத நததைச செயது, பின்பு பகலில திருமஞசனம செயவிதது, மறுபடி யும் முறகூறியபடியே பசசைக் கருப பூரப்பொடியினால் பாததத்தோடு கூடிய இருகோடுகளின வடிவம பொருநதிய திருநாமமே அணிவிகக வேண்டும, முறகூறிய திருவாபரண ரூபமான திருநாமம் திருநெறறிக குத் திவ்யமான காநதியையூட்டுவத ஞல அதை அவவப்போது விசே ஷோத்ஸவகாலங்களிலும அணிவிகக வேண்டும, உதஸவமூாததி முதலிய வாகளுககு தீபசிகையின் (விளககுச சுடரின்) வடிவமுடைய கஸதூரியினு லான திருநாமததைச சாததவேணடு மென்றும வரையறை செயதருளி ஞர்.

**அலங்காரம்**

மேலும் அநத பகவதராமாநுஜ முனிவா, சூராகள தமது சௌரியத திறகு உறுபபான தமமுடைய ஆயு தங்களைச சந்தனம புஷபம முதலிய வறறால அலஙகாரம் செயதுவிட்டு அதறகுப பினபே அவறறால தமமை அலங்கரித்துக கொள்ளும் வழககத தின்படி ஸ்ரீனிவாஸ பகவானுககு முசசநதியிலும சநதனம புஷ்பமாலை முதலியவறறால அலங்காரம் செய யும்போது முதனமுதலில் அவனது வெற்றிப பரம்பரைகடகு முககியக கருவியான திருவாழி திருச்சங்கு அழகிய திருவடித தாமரைகள முத லியவற்றுக்கு அலங்காரம செயது அதனபினபு திருமாாபின்கண பொற்கணடியில எழுநதருளியுளள ஸ்ரீதேவிககும பினபு கிரீடததிறகும பிறகு திருததோளகள முதலிய திவ யாவயவஙகளுக்கும சநதனம புஷப மாலை முதலியவறறால அலஙகாரம செயயவேணுமென்றும நியமனம செயதாா.

**திருமார்பு நாச்சியார் திருமஞ்சனமும் நாச்சியார் திருமொழி ஸேவித்தலும்**

இபபடியே, வெளளிககிழமை தோறும பெருமாளுககுத் திருமஞச னம முடிவுபெறறபினபு, திருமார் பில கனகமயமான கணடியில எழுந தருளியுளள ஸ்ரீதேவிககுத் திருமஞ சனம செயவதறகாக அவளைத திரு மாாபிலிருநது இறககி எழுநதருளி யிருககச செய்யுமபோது, எப போதும பிரியாத அவள பெருமாள் திருமாாபை விட்டுப பிரிவதைக கணமும பொறுககபபெறாத தனமை யையுடையவளாயிருபபதை நினைதத அநத பகவத ராமாநுஜமுனிவா தற காலததிய அவளது பிரிவுத துனபததை ஆறறுவதறகு உபாய மாக, அததிருமகளின வேறோா அவ தாரமாய, பூமிதேவியின அமசத தோடு கூடி அவதரிதத ஆண்டா ளால அருளிசசெயயப்பட்டதாயப பெருமாளைப பிரிநத காலததை வருததமினறிக கழிககும உபாய வகைகளை அறிவிபபதில நோகக முடையதாய நூறறுநாறபதது மூனறு பாசுரஙகளைக கொணடதான நாசசியாாதிருமொழி என்னும திவ யபபிரபநதததை அனுஸநதிகக (ஓத) வேணடுமெனறும நியமித தாா.

**திருவீதிகளை அமைத்தல்**

பினபு அவவிராமாநுச முனிவா பெருமான, 'திருவேங்கடமலையாகிய திவ்யதேசம் வெடடவும உடைக்க வும் முடியாத காடும் மலையுமாயிருந ததுகாரணமாகப் பெரிய அழகிய பட்டணமொனறினை அதில ஏற படுததத தகுதியில்லாமலிருநதத ஞல சில நாட்களுககு முனபு தரு மகுடாரனெனற ஒரு பக்தன் பெரு மாளதிருககோயிலின மதிளுககு நாறபுறஙகளிலும கற்களாலும மரங களாலும மேடுபளளமாக இருநத இடஙகளை வெகு சிரமப்பட்டுச் சம வெளியாககிச் சிறியதோா தெருவை அமைதது அதில பகவத கைஙகரி யம (தொணடு) செயபவாகளுககு வசிகக இடம (வீடுகள) மட்டும கட டுவிததான அது தவிர, பெரு மாளுடைய திருவிழாககளில பக வான பவனிவரத தகக நகரமோ அதனகணுளள நாறபுறததும வீதி களோ எதையும இஙகு அவன அமைககவிலலை. ஆகையால உதஸ வஙகள செய்ய இஙகு இடமிலலா மற போய்விட்டது. அதனால இஙகு முந்தியிருநத அரசாகள 'கோவிலுககு நாறபுறஙகளிலும வீதி யமைகக முடியாதிருந்தால் அணமை யில ஓா நகரத்தையுணடாககி அதில பெருமாளுககுத் திருவிழாவினைச செயய வேணடும' எனறிது முதலாக வைஷ்ணவாகமததிற கூறியபடி, திரு வேஙகடவனது பிரமமோத்ஸவாரம பததில திருமலை முனபாகச செய யும கொடியேறறு விழா நடநத பினபு திருவேஙகடமலைத தாழவரை யிலுளள திருசசுகனூா (திருசசா னூா) எனனும பெயாபெறற இராஜதானியில உதஸவமூாததியை இறககியெழுநதருளபபணணி அஙகு எட்டு நாட்கள மாலை காலைகளில திருவீதிகளில எலலா வாகனபபுறப பாடுகளுமபடவும எல்லாவுபசாரங களுமபடவும பிரமமோதஸவத ததைக குறைவற நடததிமுடிதது ஒன பதாம நாள காலை மஙகளமான தீாததவாரி முடியச செயயததகக உதஸவசேஷததையும விதிபபடி நிறைவேறறி அனறு மாலையில பரி வாரங்களோடுகூடப் பெருமாளைத திருவேங்கடமலைககுத திருமப எழுந

தருளப்பண்ணிக்கொண்டு சென்று கொடியிறக்கவிழா புஷ்பயாகம் முதலியவற்றை அங்கேயே செய்வித்தனர். அது முதற்கொண்டு பெருமாளுடைய உத்ஸவம் திருமலைக்குக் கீழேயே நடத்தப்பட்டு வருகிறது' என்று திருமலையிலுள்ள பெரியோர் கூறிய கதையைக் கேட்டு மனக்கலக்கமுற்று, முன்பு பிரமதேவன் தொண்டைமான் சக்கரவர்த்தி முதலியோர் எங்ஙனம் திருமலையிலேயே தீர்த்தவாரியோடு கூடிய உத்ஸவாதிகளை நடத்தினார்களோ அங்ஙனமே இக்காலத்தவர்களும் அதை இங்கேயே நடத்தவேண்டுமென்று நிச்சயித்துத் திருவேங்கடவன்கோவிலுக்கு நாற்புறங்களிலும் மேடுபள்ளமான இடங்களைச் சமமாகச் செய்வித்து அங்கு அழகியதொரு நகரத்தை நிருமித்து அதில் மாளிகைத் திரள்களால் அலங்கரிக்கப்பட்ட இரண்டு வரிசைகளைக் கொண்டவைகளும் மகோத்ஸவதினங்களில் பகவான் வாகனங்களில் புறப்பாடு கண்டருளுவதற்குத் தக்கவைகளுமான நான்கு பெரிய வீதிகளை நாற்புறங்களிலும் ஏற்படுத்தி, ஸ்வாமிபுஷ்கரிணியின் கிழக்குக்கரையில் தெற்கு வடக்காகக் குரோசவளவுடைய (கூப்பிடுதூரவளவுடைய) பெரிய தேர் வீதியையும், அதற்குக் கிழக்கே பாரிவேட்டையுத்ஸவத்தின் போது புறப்பாட்டிற்குரியதாய நாற்கோணமுள்ள வேறோர் வீதியையும் உண்டாக்கித் திருமலையிலேயே உத்ஸவம் அனைத்தையும் நடத்திவைத்தருளினார்

**உத்ஸவ கௌதுக மூர்த்திகளை மாற்றி எழுந்தருளப்பண்ணுதல்**

இங்ஙனமே, அப்போது உத்ஸவ மூர்த்தியாகப் பூஜிக்கப்பட்டுவந்த வேங்கடத்துறைவாரென்னும் திருப்பெயர்கொண்ட திவ்யமங்களத்திருவுருவின் அவதாரதினப்பெருமை, திவ்யநகரத்தின் வளர்ச்சிக்கும் கற்கதாராயோகத்தில் அவதரித்த ஸ்ரீனிவாஸப்பெருமாளுடைய (மூலமூர்த்தியினுடைய) திவ்யமான ஐச்வர்யத்தின் மேன்மேல் வளர்ச்சிக்கும் தடையாக உள்ளதென்று பிரசித்தமான ஐதிஹ்யத்தைப் (பழையதாகச் சொல்லிவரும் கதையைப்) பெரியோர் வாயிலாகக் கேட்டு, அப்போது கௌதுகமூர்த்தியாக (=நித்யார்ச்சாமூர்த்தியாக) ஆராதிக்கப்பட்டு வருகின்ற மலையப்பனென்னும் பெயர்கொண்ட திவ்யமங்கள விக்ரஹத்தை உத்ஸவமூர்த்தியின் ஸ்தானத்திலும், முற்கூறிய வேங்கடத்துறைவாரைக் கௌதுகமூர்த்தியின் ஸ்தானத்திலுமாக மாற்றி எழுந்தருளப்பண்ணி, பிராணதாரணம் முதலாக ப்ரதிஷ்டையை விதிப்படியே செய்வித்து, சாஸ்திரமுறைப்படி அவர்களுக்குத் திருவாராதனத்தையும் ஸ்ரீராமாநுஜமுனிவர் நடைபெறச் செய்தார்.

**அர்ச்சகரை நியமித்தல்**

இதுபோலவே, தம்மிடம் பஞ்சஸம்ஸ்காரம் (1. தோள்களில் திருவாழி திருச்சக்கரங்களை ஒற்றிக்கொள்ளுதல், 2. பன்னிருதிருமண்காப்பணிதல், 3 அடிமைக்குரிய பெயரைப்பெறுதல், 4. மந்திரோபதேசம் பெறுதல், 5. பெருமாளுக்குத் திருவாராதனம் செய்தல்) பெற்றுத் தமவாயிலாக பகவானைச் சரணமாகப் பற்றியதனால் பரமைகாந்தியானவரும் (=ஸ்ரீமந்நாராயணனொருவனையே தாம் அடையும் பயனாகவும் அதனை அடைதற்குரிய உபாயமாகவும் அறுதியிட்டவரும்) ஸ்ரீவைகாநஸாகமமென்னும் கடலைக் கரைகண்டவரும் பிம்பாதரர் (செங்கனிவாயர்) என்று பெயர் பெற்ற பாகவதோத்தமருமாகிய அர்ச்சக (பூஜை செய்பவ)ருடைய குலத்தில் பிறந்தவர்களைக்கொண்டே திருவேங்கடமுடையானுக்கு நித்யதிருவாராதனம் நடத்திவைக்க வேணுமென்றும் யோகியர்தலைவரான இராமாநுசர் வரையறை செய்தருளினார்.

**ஸ்ரீராமாநுஜமுனிவரை அனைவரும் துதி செய்தல்**

இங்ஙனம் இட்ட கட்டளைகளை அப்படியே நிறைவேற்றிவைக்கவேண்டுமென்ற மனவுறுதிகொண்டவனும் தமது மனம்போல் நம்பத்தக்க அடியவனுமான யாதவராஜன் வாயிலாகத் தமவிருப்பப்படியே எல்லாவிதமான கைங்கரியங்களையும் நடத்திவைக்கும் பொறுப்பையேற்ற இராமாநுச முனிவரை அவர் செய்தருளிய சீர்திருத்தங் காரணமாக எல்லையில்லாத மகிழ்ச்சியுண்டாகப் பெற்ற பாகவதப் பெரியோர்கள் அனைவரும்—இவர் ஆதிசேஷனே சேனைமுதல்வரோ அல்லது திருமகள் நாதனே என்று ஊஹிக்கப்படுகின்ற யதிராஜருக்கு மங்களம் உண்டாகுக. தூய்மையுள்ள பாகவதர்களாகிய சிஷ்யர்களாலும் மனத்துக்கினிய பரிஜனங்களாலும் நன்கு அறியப்பட்ட தமது அவதாரவுண்மையையுடைய யதிராஜருக்கு மங்களம். திருவேங்கடமென்னும் திருத்தலத்தைச் சைவரால் வந்த ஆபத்திலிருந்து நீக்கிய விஷ்ணுபக்தர்தலைவராகிய யதிராஜருக்கு மங்களம். திருவேங்கடமலையரசனுக்குத் திருவாழி திருச்சங்குகளை அளித்த நல்லாசிரியரான யதிராஜருக்கு மங்களம். ஸ்ரீமத வைஷ்ணவமதத்தை உலகில் எல்லாவிதத்திலும் காப்பாற்றுவதில் விரதங்கொண்ட குருவாகிய யதிராஜருக்கு மங்களம். குத்ருஷ்டிகளின் (வேதத்திற்குப் பொருள் கூறுவதில் கெட்ட நோக்கமுடையவர்களின்) வஞ்சனையினாலுண்டான உபநிஷத்துக்களின் ஆபத்தினைக் களைந்த இராமாநுசரென்னும் யதிராஜருக்கு மங்களம். (வேதவியாசர் அருளிய) தூய்மையான பிரமமஸூத்திரத்திற்கு குதருஷ்டிகளால் ஏற்பட்ட இடரை வேரோடு களைந்தெறிந்த யதிராஜருக்கு மங்களம்; ஆழ்வார்கள் அனைவரின் திரண்ட ஒரே மூர்த்தியானவரும் கலியுகத்தின் தோஷங்களை அழிப்பதில் முயலுமவரும் பெரிய தயைவெள்ளமுடையவருமான யதிராஜருக்கு மங்களம் பல அவதாரம் செய்தும் ஈடேறாத திருமாலின் எண்ணத்தைக் (=உலகில் எல்லோரும் தன்னையே அடைந்து வாழச்செய்ய வேணுமென்ற கோரிக்கையைக்) கணப்பொழுதில் நிறைவேற்றிய யதிராஜருக்கு மங்களம். உலகிலுள்ளோர் அனைவராலும் வணங்கத்தக்க குருவானவரும் ஆதிசேஷனின் அவதாரமானவருமான ஸ்ரீராமாநுஜரென்னும் யதிராஜருக்கு மங்களம் உண்டாகுக—என்று எப்போதும் மகிழ்ச்சியுடன் வாழ்த்துக் கூறலாயினர்.

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

**3-30 முதல் 3-45 வரை : சுத்தி**

3-45 முதல் 4-30 வரை ; தோமாலசேவை
(அமந்த்ரஞோத்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே **அனுமதிக்கப்படுவர்**)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை **ஸகஸ்ரநாம அர்ச்சனை,**
(அமந்த்ரஞோத்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம) 2வது மணி.

1-00 முதல இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

**1-00 முதல் 7-00 வரை: கல்யாணோத்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோத்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன**

இரவு 7-00 முதல் 8-00 வரை ; சுத்தி, இரவு **கைங்கர்யங்கள், இரவு மணி**

8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

புதன் கிழமைகளில (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

**3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.**

**3-45 முதல் 4-30 வரை : தோமாலசேவை**
(அமந்த்ரஞோத்சவ கிருஹஸ்தர்கள மற்றும ரூ 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

**4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை**
ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரஞோத்சவ கிருஹஸ்தர்கள் மற்றும ரூ 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவா)

**5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.**

**6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி**

**8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.**

**மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோத்சவங்கள், ஆர்ஜித பிரம்மோத்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன**

**இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன**

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

வியாழக்கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை நடைபெறுவதால்)

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமாலை, அர்ச்சனை முதல்மணி மற்றும அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பனை

7-30 முதல் 9-00 வரை : தோமாலா சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி, சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோத்சவம், பிரம்மோத்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு 7-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு 10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

வெள்ளிக்கிழமைகளில (அபிஷேகம நடைபெறுவதால்)

3-00 முதல 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள

5-00 முதல 6-30 வரை : அபிஷேகம

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பனை

8-00 முதல் 9-00 வரை : தோமாலசேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு **கைங்கர்யங்கள், மணி, முதலியன**

8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**

நடு இரவு 12-00 முதல் 12-30 வரை : **சுத்தி,**

**12-30** நடு இரவு : **ஏகாந்தசேவை**

(28-ம பக்கத் தொடர்ச்சி)

படசம:— சுககிலபட்சம சுபிடச மானது கிருஷ்ணபடசத்தில சப தமி வரையில வளமானவை. காமி கம, சுககிலபடசதது முதல ஐநது திதிகளையும விலககச சொலகிறது அவ்வாறே, கிருஷ்ணபடசதது ஏகா தசி முதல அமாவாசை முடிவான திதிகளையும விலககுதல வேணடும.

நடசத்திரம: ரேவதி, ரோகிணி, புஷய, ஸவாதி, சிராவண, சிரா விஷட, சதாபிஷ, சிதர, ஆதிதய, அஸவின, மிருகசீருஷ நட்சததிரங கள் மேனமையன எனறு இரு ஆகமங்களும இசைககினறன

உததரம, பூரம முதலாம நடசத திரக கூடடஙகளையும, புனாவசு, ஹஸ்தம, அனுராதம, விசாகம முத லிய விணமீனகளையும விசேடம் எனக காமிகம விளமபுகிறது. கிருததிகை, பரணி, ஆயிலயம, கேட்டை முதலியன ஆகாது

ராசி காமிகபபடி, ஸதிர ராசி உத்தமமானது உபயராசி மததிய தரம, சரராசி கூடாது. ஆயின, இது குருவோடு கூடிநிறகின் கொள ளத தகும

வாரம இநதிரம (திஙகள), சசி (புதன), மநதிரி (வியாழன), அசுரம (வெளளி) முதலாம வாரஙகளை முக கியமாயப பேசுகினறன இரு ஆக மஙகளும ஆனால, சைவாகமததில விலககப்படும ஆககம (ஞாயிறு) வைணவாகமததில விழையபபடுகி றது. மஙகள (செவவாய) வார மும, சனியும இரு ஆகமஙகளிலும விலககபபடுகினறன

திதி நநத பகுதியினவையாகிய 1,6,11-வது திதிகள வேணடபடு பவை எனறும, ரிகதப பகுதியின 4, 9,14-வது திதிகளும, மறறும, 8, 6-வது திதிகளும, ஷஷடி கரணததுத திதிகளும விலககததககவை எனறும காஸ்யபம காட்டுகிறது.

திதி, நடசததிரம, மாதம சயநங கள ஆகியவறறின முடிவையும், ஆடி மாதத்தையும விலகக வேண் டும் எஜமானனுக்கு, குறைநத கெடுதியும கூடுதல் நனமையும செயயும நடசததிரஙகளுளள நாட களும, அவவாறே. எஜமானனுககு கிரக பலனகளைக கூட்டும நாட களும, சூரியோதயமும் மதியமும் பொதுவாக வாஸது முதலாம் செயல்களுககுத தகுநதவையே

நிமிததம

எசசெயலையும இயறறத தொடங் போது காணும நல நிமிததமோ, நல சகுனமோ, அசசெயல நிறை வையோ வெறறியையோ துரிதப படுததும அறிகுறியாகும.

காமிகாகமம, கீழககணட வழி யில காணும சகுனங்களை நல்லறி குறிகளாய நவிலகிறது. வித்வான் கள, மனைவியோடும மக்களோடும வரும பிராமமணர்கள, பலசாலி கள, ஆபரணஙகள தரிதத மாதா, நனமககளோடு கூடிய மாதா, மகிழசசி ததும்பும மஙகையா, அழகு நிறைநத பெணடிா, கருவுறற பெணடிா, கனனியா, விளையாடும் பிளளைகள, உணவுப பணடஙகள், பானஙகள், மாமிசம, தீபம், சநத னம, மாலை முதலாம சுகந்தத் திரவி யஙகள, நெய, தயிா, ஸ்ரீவதஸம, பூரணகுமபம, சஙகு, கோரோ சனம, கண்ணாடி, கொடி, வெண கடுகு, பால மறறும் சிறநதவற்றின் தரிசனஙகள

மூஞ்சூறு, குளளநரி, பலலி, பிங் கள நிறததுப் பனறி, குயில, ஆந்தை இவறறை இடங்காணல நனமை தரும ஜோடிப பறவைகள, வணங கத்தகும பறவைகள, அணடங் காககை முதலியவை காணலும நனமை

ஆறறின அருகினிலே விரைந்து பறநது செலலும பறவைகள, தூரத்தே உயரப பறககும பறவை கள, செலவநதா மாளிகைகளையும, அரணமனை ஆலயஙகளையும் புனிதத் தலஙகளையும, ரமமியமான சூழல் களையும அடைநதிருக்கும பறவை கள, சுவைமிக்க நீா, பால, பழம, பூககள நிறையும மரங்கள் முதலி யவையும் நறசகுனஙகளே.

தீய அறிகுறிகள. வீட்டருகே வரும காடடுப்பசுவும, காடடிலே

# திருமயம் ஸ்ரீபெருமாள்

**திரு பி. கலாநிதி-பாபநாசம்**

புதுககோட்டை திருமயம எனற ஊரில ஊமையன கோட்டை இருககிறது. இநத மலைமேல சயனததில இருககும ஸ்ரீ பெருமாள ஆடசி செயகிறாா. ஸ்ரீ சயனப பெருமாள ஆனநத தவக்கோலததை நமக்கெலலாம அருளும வணணம அவர் தவமியறறுவது கண் கொளளாக காட்சி ஆகும.

ஸ்ரீ பெருமாளுககு தைலகாபபுதான ரொமப விசேஷம தைலக காபபுப பெருமாள, ஸ்ரீ பெருமாள் விகரகஙகள மிகவும விசேஷ மானவை. சாநநிதயமும வாயநதவை. மலைமேல இருககும ஸ்ரீ திரு வேஙகடமுடையானைப போனற பெருமையும, அருமையும இநதப பெருமாளுககும உணடு.

எனறும வளளனமையோடு விளஙகும மலைமேலிருக்கும ஸ்ரீ புதுககோட்டை திருமயம பெருமாளை, நம் க்ஷேமததிறகாகவும, உலக க்ஷேமததிறகாகவும வணஙகி துதிப்போம்; ஸ்ரீபெருமாளை சேவிபபோம.

காணும் வீட்டுப் பசுவும், பகலில உலாவும சககரவாகம முதலாம பற வைகளை இரவில காணுதலும், இர வில உலாவுகின்ற கோட்டான போனற பறவைகளைப பகலில் பார்ததலும், ஆறறைக் கடக்கும் பறவைகளும, மயஙகிச்சோரும பற வைகளும் காணல் ஆகாது.

சோகத்தைத் தரும தீக்குறிகள: வெல்லம், எலுமபு, கருநதானியங கள, உலாநத புறகள, சோகம தரு வன. பரட்டைததலையன, பசியால் வாடி வருபவன, வழுக கைத் தலையன், அழுக்காடை புனைநது விகாரமாய வருபவன, நாத்திகன், பௌத்தன் முதலானோ ரின் காட்சியும், குரலெடுதது அழு தல், கண்ணீர் விடல, கலகம் காணுத லும் அவவாறே துா நிமித்தங்கள.

நிமித்தம நற்குறியாக இல்லாது போனால், மூனறு முறை சோதித்து, அம்மூனறும் துர்ப்பலனே காட்டி னால், எடுதத செயலை விட்டிட வேண்டும்.

காஸ்யபம் காட்டும் சகுனங்களில் சில, காமிகம் காட்டும் சகுனங்க ளோடும் மாறுபடுகின்றன. காஸ்ய பம சொல்லும் சுகச் சகுனங்கள்: எருது, குதிரை, யானை, பசு, கொடி, கொடை, சாமரம், சக்கரம், அங்கு சம், பாயும் ஆடு, தேவதை, மஞ சள, சாணம், அரிசி, எள, யவம், அலங்கார பூஷிதையாய் வரும் கணிகை முதலாம் காட்சிகள்.

மேலும், 'போ', 'கொண்டு வா', 'எடுத்துக்கொள', 'பேசு', 'வெறறி கொள்', மறறும அதிகாரச் சொற கள இவை கேட்டல் மாணபுடை யன. வீணை நாதம், வேணு கானம, மிருதஙக ஓசை, வேத மஙகலம் ஓதல், அனுவாக சூக்தம் சொல்லல் இவை கேட்டாலும், தயிர், பால், நெய, நீர், பூர்ணகும்பம் முதலி யவை சுமநது வருவது பாாத்தலும், கழுத்து மாலை, சக்கரம், நுகத்தடி காணலும், மதநீா ஒழுகும் யானை, ஈயம் தவிர மறறைய உலோகங்கள, ரத்தினம, குடதீபம, தோள சுமநது வரும் கும்பஙகள, சங்கு, மகுடம, பேரிகை இவை காண்பதும பெருஞ சுகம தரும.

உடும்பு, பூனை, கருநிறக்காட்டுக கோழி, செமபோதது, கிளிப் பிள்ளை, செநநிற அலகுளளப பறவை, குயில், காகம, கோழி, பெரிய வண்டு முதலியனவும அழகிய மங்கையும இடமிருநது வலம் போவது வளநதரு சகுனஙகள்.

நீலப் பறவைகள, கருடன, நாரை, வீட்டுப் பல்லி, காட்டுப பூனை, காட டுச சேவல், குதிரை, கழுகு, தவிட் டுப் பறவை முதலியன வலமிருந்து இடம் போனால சுகநதரும் சகுனங கள்.

ஓநாய், ஆநதை, பல்லி, அணடங காக்கை இவற்றின கூககுரலகள வலபபக்கத்தில் கேட்டால் கெட்ட சகுனங்கள.

கேட்டைத் தரும் தீச சகுனங களாவன: கூனி, ஒற்றைக் கண் ணன், பசியால் வாடிவதங்கியவன, குறளன், பெரும்பிணியாளன, மூக் கறுந்தவன, நாத்திகன, வழுககைத் தலையன், சண்டாளன், வல்லூறு, கழுகு, குரங்கு, விடாய் ஒழுகும் பிடியும், குதிரையும், பலராலும நிந் திக்கப்பட்ட கயவன், வீழும மரங கள், மின்னல, வானவில, பகலில் நட்சத்திரம் முதலியன காண டல்.

உழவு: தலநிர்ணயததிறகுரிய நிலத்தை உழுவது, அதைத தூய்மை செயயும் செயலாகும. இந்த உழவு, அநத ஆலயச செய லாக்கத்திறகு ஓர் ஆரமபமாகும்.

காமிகம்: வெகுவெண்மையாய், நன்கு பழகியதாய், இளமையாய், வலிமையுளளதாய், வளாந்த விதை களுடையதாய், மூக்குக் குத்தாத தாய் இருக்கும் இரு எருதுகளை இயம்புகிறது.

காஸ்யபம இது நால்வருணத் தார்ககும, வெணமை, சிவபபு, மஞ சள, கருமை என நான்கு வண்ணங களுடைய எருதுகளைச் சொலகிறது அவை, காயடிககாதவையாய, வால் குளமபைத தொடுவனவாய, சம அளவான கொமபுகளும குளம்பு களும உடையனவாய், அஙக ஈனம இல்லாதனவாய இருததலும வேண் டும.

இரணடு ஆகமஙகளும கலபபை, நுகத்தடிகளைச செய்யத தகுதியான மரங்களை நாலவருணத்தாருககும வெவவேறுய விதிக்கினறன. காமி காகமப்படி, பிராமமணாகளும க்ஷத திரியர்களும், கருஙகாலி மரத் தாலும், வைசியமும சூத்திரரும் கொன்றை மரததாலும செய்து கொளள வேணடும. காஸயபம, பிராமமணாகள கருஙகாலியாலும, க்ஷததிரிய ஆசன மரததாலும், வைசியா சண்பக மரததாலும, சூத திரா சிரீச மரததாலும செயது கொளள வேண்டும என விதிக் கிறது.

மேலும, நுகததடியை வேமபு, மகிழம, தாணறி, வேலன, முதலிய மரஙகளால செயய வேணடும எனக் காமிகமும, வேணு (மூஙகில்), சமப கம, புனனாகம முதலியவறறால் செயய வேணடும எனக காஸ்யப மும் சொலகிறது

ஏர் கொழுவுககு ஏறற உலோ கஙகளாய, பொன, வெளளி, செமபு, இருமபு முதலியவறறையே இரு நூலகளும விதிக்கினறன.

உழவுக கயிறுக்களுககுரியனவாய, பசுத்தோல், மஞசம்புல், பனை நாா, சணபபை நார், தேங்காய நாா முத லியவற்றைக் காமிகம் உரைக்கிறது.

(முறறும்)

# பிள்ளையுலகாசிரியர்

திரு. ந. ரா. முருகவேள், M.A, M.O.L,
ஆசிரியர் திருக்கோயில், சென்னை.

**முன்னுரை :**

பிள்ளைலோகாசாரியர் எனனும் பெரியார், நமபிள்ளைக்கு மாணுக்க ரும், திருவாய்மொழிககுப் பகவத் விஷயம் எனறு எல்லாராலும் கொண்டாடப்பெறும் ஈடுமுப்பத் தாறுயிரப்படி என்னும் வியாக்கி யானததைச செய்தவரும், மகா விரக்தருமான வள்ளல் வடக்குத் திரு விதிபபிள்ளையினுடைய மூத்தகுமாரர்!



வடக்குத் திருவிதிப்பிள்ளை, தம்மு டைய ஆசாரியராகிய நம்பிள்ளையை, முதலியாண்டான திருவம்சததில் தோன்றி, ஆசாரியராகப் புகழ்பெற் றிருந்த கந்தாடைத்தோழப்பர் என்ப வா, வியநது போற்றி வழங்கிய லோகாசாரியர் எனனும் சிறப்புத் திருப்பெயரையே, குருபக்தியும் நன் றியுணாவும கொணடு தமது புதல்வ ருக்கு இட்டு வழங்கி மகிழ்ந்தார்.

நமபிள்ளையாகிய லோகர்சாரிய ருக்கும், இவருக்குமிடையே வேறு பாடு அறிதற்பொருட்டு, இவர் 'பிள்ளைலோகாசாரியர்' என்று புகழ்ந்து போற்றப்பெற்றூர். இசசெயதி,

"துனைபுகழக் கந்தாடைத் தோழபபர்
தம்முகபபால
என்னவுல காரியனோ வெனறுரைக்
கப—பின்னை
உலகா ரியனெனும்பேர் நம்பிளளைக்
கோங்கி,
விலகாமல் நிறை தென்றும்மேல"

"பின்னைவடக்குத் திருவிதிப்பிள்ளை
அனபால
அன்ன திருநாமத்தை யாதரித்து—
மன்னுபுகழ்
மைந்தருக்குச் சாத்துகையால்வநது
பரநதது எங்கும்
இந்தத் திருநாமம இஙகு"

எனவரும் உபதேச ரததினமாலைச் செய்யுட்களால் விளங்கும இவரு டைய திருத்தங்கையார் ஸ்ரீரங்க நாதாச்சியார். அழகிய மணவாளப் பெருமாள்நாயனூா, இவர் திருத் தம்பியார்.

இவர் "வன்பெரு வானகம் உய்ய, அமரர் உய்ய, மண்ணுய்ய, மண்ணுலகில் மனிசர் உய்யத், துன்ப மிகுதுயர் அகல, அயர் வொன்றில் லாச் சுகம் வளர, அகமமகிழும் தொண்டர் வாழ, அன்பொடு தென் திசை நோக்கிப் பள்ளிகொள்ளும் அணியரங்கன்" திருவரங்கத்தில், அவதரித்தவர்; அவ்வூரிலேயே வடக் குத திருவீதியில் நித்திய வாசம் செய்தவர்; பிரமசரிய நிலையினர்.

இவருக்கு ஆசாரியர் நம்பிள்ளை. திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபநதங்கள், ஈடு முதலான வியாக் கியானங்கள், ஸ்ரீபாஷ்யம் முதலான கிரந்தங்களை இவருக்குச் சாதித் தவர், இவர்தம் திருத்தகப்பனூரான வடக்குத திருவீதிப்பிள்ளை.

இவருக்கு மாணுக்கர்கள்: கூர குலோத்தமதாசர், திருவாய் மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப் பிள்ளை, மணல்பாக்கதது நம்பியார், திகழக்கிடந்தார் அண்ணன் முத லாயினோர். இவர் இவ்வுலகத்தை அலங்கரித்துககொணடு எழுந்தரு ளிய காலம் பதினுன்காம் நூற் றுண்டு.

**அருளிச் செய்த நூல்கள் :**

1. **தனிப் பிரணவம்:** பெரிய திரு மந்திரமான திருவெட்டெழுத்தின பொருளை விவரித்து உரைப்பது.

2. **தனித்துவயம்:** மநதிர ரத்தின மான துவயத்தின் பொருளை விவ ரித்து உரைப்பது.

3. **தனிச்சரமம்:** ஸ்ரீபகவத் கீதையில் வருகின்ற சரமச சுலோ கத்தின் பொருளை விவரித்து உரைப் பது.

4. **யாத்ருச்சிகப்படி:** திருமந்தி ரம், துவயம், சரமச்சுலோகம் என் னும் மூன்று மந்திரங்களின் பொருள்களைச் சுருக்கமாகக் கூறு வது.

5. **பரந்தபடி:** மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள் களையே மிகமிக விரிவாகப் பேசுவது. இவ்வுரையில் நாம் பல விஷயங் களைத் தெரிந்து கொள்ளலாம்.

6. **ஸ்ரீயःபதிப்படி:** மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள் களையே மிகச் சுருக்கமும் இன்றி, மிக விரிவும் இன்றி, இடை நிகர்த்த தாய்ப் பேசிக்கொண்டு செல்வது. ஆனுல், இதில் வடசொற்கள் மிக அதிகம்.

7. **முமுட்சுப்படி:** மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள் களையே சூத்திரவடிவில் மிகச் சுருக்க மும் இன்றி, மிக விரிவும் இன்றி, வடமொழிக் கலப்பும் அதிகம் இன்

றிப் பததுவகை அழகும் பொருந் தக கூறுவது மிக அரியதொரு நூல இதறகு மணவாள மாமுனி கள வியாககியானம அமைநதிருககி றது. இவறறுள யாதருசசிகபபடி, ஸ்ரீய பதிபடி, முமுட்சுபபடி இம மூனறும முதறகுறிபபால பெயா பெறறவை. பரநதபடி தனமை யாற பெயாபெறறது.

8 தத்துவத்திரயம்: சிதது அசிதது ஈசவரன என்னும் ததது்வங களை மூனறனுடைய விளககத்தை விவரித்துக கூறுவது. சூததிரயாப பில அமைந்தது. இதறகு மணவாள மாமுனிகளுடைய வியாககியானம அமைநதிருககினறது.

9 அர்த்தபஞ்சகம்: ஐநது பொருளகளின தனமையைப பறறி விவரித்துக கூறுவதால இபபெயா பெறறது ஐநது பொருளகளின தனமைகளாவன தனனுடைய தனமை, இறைவனுடைய தனமை, தானபெறும பயனை அடைவிககும வழியின தனமை, பயனை அடைய வொட்டாமல தடுககும தடையின தனமை, பேறறின தனமை' எனபன வாம. ''மிகக இறைநிலையும, மெயயாம உயிாநிலையும, தகக நெறியும, தடையாகித — தொககியலும, ஊழவினையும, வாழவினையும, ஓதும குருகையாகோன, யாழின் இசை வேதததது இயல்'' எனபது, பராசர பட்டா பாசுரம

10. தத்துவ சேகரம்: திருமகள கேளவனே பரமபொருள எனப தனை, வேதம் முதலிய பல நூலகளிலிருந்து பிரமாணஙகள காட்டி உறுதிபபடுததுவது தத்துவம - திருமால். சேகரம-ஓா அணி விசேடம. இதனுள உயிர் நிலை முதலிய ஏனைய பொருள்களின தனமைகள கூறப பட்டிருபபினும், இறைநிலை கூறுதலே மிகுதியாதலின, இபபெயா பெறறது. இதனை ''இறையுணர் கள வியல'' எனறு மிகுதியாற பெயா அமைநதது போனறு கொளக.

11. பிரபந்த பரித்ராணம்: தனனை அடைந்தவாகளைப் பாதுகாத்தல், திருமகளகேள்வன ஒருவனுககே இயலபாய அமைநதது, ஏனையோர் காத்தறகு உரியா அலலர் எனபத னைப் பல உதாரணஙகள காட்டி, மககளுடைய மருட்சியைப போக்கும ஓா உயரிய நூல

12. நவவித சம்பந்தம்: இறைவனுககும உயிாகளுககும உளள பிதா புததிர - இரட்சக, இரட்சிய-சேஷ சேஷி-பர்ததுரு பாாயா-ஞாதரு ஞேய-ஸவ ஸவாமி-ஆதார ஆதேய-சரீர சரீரி-போகதுரு போககியம எனற, ஒனபது வகைபபட்ட சமபநதஙகளை விளககிக கூறும நூல

13. நவரத்தின மாலை. ஒனபது வித இரததினங்களாலாய மாலை போன்று ஒனபது வகையான பொருளகளைப பறறிக கூறுவது. அதாவது, தனனையும்-தனககுப் பகையாய நிறகும உடலையும-உடலினைப்பறறி நிறகும உறவினர்களை

---

# வையகத்தில் வைகுந்தம்

**புலவர் கோ. இளைய பெருமாள்-ஆரணி.**

கோவிநதா வெனறுதினம கூவித தொழுவாாக்குப
பாவஙக ளெலலாம பறநதோடும்—ஆவலுடன
மெயயன்பா மேனமேலும் மேவுதிரு வேஙகடமே
வையகத்தில் வைகுநத வாழவு.

திருவேங கடமலையைத தேடித தினமும்
வருவாாக கருளவழஙகும வள்ளல—ஒருநாளும
தீராத வல்வினைகள தீாத்தினிது காத்தருளும்
ஆரா அமுதன் அவன.

ஏழு மலைமேல் எழுந்தருளும் ஈசனடி
தாழும அடியாாககுச சார்பிறவி—ஏழும்
அலையாமல் இனபததில் ஆழ்ந்திருப்பாா என்றும
உலையாத பேரின்ப முறறு.

அவனே உலகனைததும ஆக்கி யளிபபான
அவனே அழிததருளும் ஐயன—அவனே
பரமபொருளாய எவவிடததும் பாாபபதனால நெஞசில
உரம்பெறுவாாக் கினபம உறும.

வரமளித்துக் காத்தருளும வைகுந்த வாசன
பரம பதமாகப் பாரில—பரவினர்ககுக
காட்சி யளித்துக கருணை பொழிகினறான
மாட்சிமிகு வேஙகடததில் வந்து.

தீவினைகள தீாககும திருவேஙக டேசனபோ
நாவினிக்க நாளும நவினறேத்திப்—பூவினிலதேன
உணணவரும வண்டினமபோல ஓஙகுதிரு வேங்கடததை
நண்ணவரும் இன்ப நலம்.

ஏழுசீா கொண்டமைந்த இனகுறள்வெண் பாவைபபோல
ஏழுமலை வீற்றிருக்கும் எம்பெருமான—சூழும்
அடியவருக் கெல்லாம் அறமுதலா நானகு
படியளித்துக் காபபான பரிநது.

யும்-உண்மை ஞானம இன்றி, வினை யியற் பிறபபிலே அழுநதிக கிடக் கும் மககளையும-பிற தெயவஙகளை யும-ஸ்ரீவைணவாகளையும - ஆசாரிய னையும- பிராட்டியையும - இறைவனை யும ஆக, ஒன்பதின்மாகளையும ஒரு வன் நினைததிருககவேணடிய விதத தைத தெளிவாகக கூறுவது

14 சாரசங்கிரகம் சாரமான துவயத்தின பொருளைச சுருககிக கூறுகினற காரணம பற்றி, இந நூலுககு இபபெயர் அமைநதது. துவயம வேதசாரம எனப்படும அதில் பத்துப பதஙகள உள்ளன, அநதப பததுப பதஙகளின பொருள களையும், திருவாயமொழியில உள்ள பததுப பத்துகளும, ஒவ்வொரு பத திறகு ஒவவொரு பொருளாக நிரலே சோத்து அமைததுக கூறு வது.

15. பிரமேயசேகரம்: இறைவனு டைய திருவருளைப பெறற ஓா உயிா அடையததகக பயன், இறைவனு டைய திருவடிகளில செயயும தொண்டே எனபதனை, முறைபபடி விளக்கிக கூறுவது, பிரமேயம-பிர மாணததால அறியபபடுவது. இங் குப் பிரமாணம என்பது உணமை யறிவினைப் பிறபபிககும் நூலகளைக குறிககினறது.

16 சம்சார சாம்ராஜ்யம் இதற குச சமசாரமாகிய அரசியலைப பற் றிக கூறுவது எனபது பொருள, அர சனுககுப் படைவீடு போல்வது இறைவனுககு இநத உடல. இது முற்றுருவகம. இநத உடலில இருநதுகொணடு அரசு புரியும ஆன மாவைத் தனனுடைய திருவரு ளாலே தனனிடததில் திருத்திச சேர்ததுககொள்ளுவான் இறைவன என்று, இறைவனுடைய திருவருளை விரித்துக கூறுகின்றது.

17. அர்ச்சிராதி கதி இது ஆன்மா 'ஆாசசிஸ' எனப்படும் தேவன் முதலான தேவர் பலர், எதிர்கொள்ளப்போகும வழியான முத்தி நெறியைப் பற்றி விரித்துக் கூறுவது பிரமேயசேகரததில் சுருஙககக கூறியதை, இநநூலில மிக விரித்துப் பேசுகிறா. திருவாய மொழியில் 'சூழ்விசுமபணி முகில' எனறு தொடஙகும திருபபதிகம இநத அர்சசிராதிகதியைப பற்றிக் கூறுவதேயாம்.

18 ஸ்ரீவசனபூஷணம்: இரத்தி னங்கள மிகுநதுள்ள ஆபரணததிற்கு இரததினபரணம எனறு பெயரா மாறு போல, முன்பு இருநத ஆசாரி யாகளுடைய வசனங்களே மிகுதி யாய், படிப்பவாகளுக்குப பேரொளி யைத தருவதாக இருபபதனல், இத் நூலுக்கு ஸ்ரீவசனபூஷணம என்று திருபபெயராயிற்று. இந்நூல் 9 பிரகரணங்களையுடையதாய், 463 சூத்திரஙகளைக் கொண்டு விளங்கும்.

'' முனறும குரவோர் மொழிந்த வசனங்கள்
தனனைமிகக் கொண்டு, கறறோர் தம்
முயிாக்கு-மினனணியாச்,
சேரச் சமைத்தவரே, சீாவசன பூடண மென்
பேர்இக் கலைக்கிடடார் பின ''
உபதேச ரத்தினமாலை

முடிவுரை

மேறகுறித்த நூல்களையெல்லாம் ஒரு தொகுதியாக ''அட்டாதச ரகசி யம'' (பதினெண மறைபொருள் நூலகள்) என வழங்குவா. சைவத் தில் பதினாகு சிததாநத சாத்திரங் கள இருப்பன போன்று, இவை வைணவ மதத்திறகு அமைந்திருக் கின்றன. இவற்றில் கூறபபட்டி ருப்பவை முறறும், நாலாயிரத் திவ் வியப் பிரபந்தங்களின் கருத்துப் பொருளும், வேதாந்தங்களின் நுண் பொருளுமாகும். ★



ஸ்ரீ சென்னகேசவ சுவாமி-புஷ்பகிரி ஆ. பி.

# பக்தி இலக்கியத்தில் பழமொழிகள்

பேராசிரியர் டாக்டர்
ந. சுப்புரெட்டியார்—சென்னை-40

ஒரு நாட்டின் பண்பாட்டை உணர்தற்கு அந்நாட்டு மொழியுள் வழங்கும் பழமொழிகள் பெரிதும் பயன்படுவன. பழமொழிகளே அந்நாட்டு மக்கள்பால் அடிபட்டு வரும் மன இயல்புகளை எடுத்துக்காட்டுவனவாகும். உலக வழக்காகிய இப்பழமொழிகளின் மேன்மையைக் கருதிஇவற்றைக்கையாண்டுபொருள் சிறக்கச் செய்தல் நாவன்மையுடைய கற்றோர்க்கும் மற்றோருக்கும் இயல்பாகின்றது. பழமொழிகளைச் சிறந்த உரைநடை ஆசிரியர் எவரும் கையாளுவார். பழமொழிகள் பயின்று வரச் செய்யுள் நூல் இயற்றும் தன்மை பேரறிஞர் நூல்களில் காணப்படும். இங்ஙனம் பழமொழியின் பொருட் சிறப்பை யுணர்ந்து அறிஞர் அவற்றைப் போற்றிக் கையாண்டாலும், தமிழகத்தில் வழங்கிய சிறந்த பழமொழிகளைத் திரட்டி ஒவ்வொரு பழமொழியைக் கொண்டும் தாம் கருதிய சிறந்த பொருள்களை விளக்கமுறுத்தக் கருதிய சமண சமயப் புலவோரான முன்றுறையரையனார் ''பழமொழி நானூறு'' என்ற நூலையே இயற்றியுள்ளார். நீதி நூல்களுள் திருக்குறளுக்கு அடுத்தபடியாக எண்ணப்படும் ''நாலடி நானூறு'' என்ற நூலிலும் பழமொழிகளைப் போற்றிக் கையாண்டிருப்பதைக் காணலாம். இந்த நூலும் சமண சமயப் பெரும் புலவர்களால் இயற்றப்பெற்றதென்பது உளங்கொள்ளத்தக்கது. மேலும் இந்த இரண்டு நூல்களிலும் காணப்பெறும் பழமொழிகள் தொடர்புற்று நிற்பதும் தெளிவாக அறியப் பெறுகின்றது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க காலத்தையும் நீதி நூல் காலத்தையும் அடுத்துத் தெளிவாகக் காணப் பெறுவது பக்தி இயக்கக்காலமாகும். கி.பி. ஏழு, எட்டு, ஒன்பதாம் நூற்றுண்டுகளில் தமிழகத்தில் சைவ சமயப் பெரியவர்களான நாயன்மார்களும் வைணவ சமயப் பெரியவர்களான ஆழ்வார்களும் தோன்றிப் பக்தி பாடல்கள் பாடி ஊர் ஊராகச் சென்று தத்தம் சமயங்களைப் பரப்பி வந்தனர். நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த பௌத்த சமண சமயங்களை எதிர்த்து மக்களைத் திரட்டுவதற்குக் கலை நயத்துடன் கூடிய பக்திப்பாடல்கள் பயன்பட்டன. நாயன்மார்களும், ஆழ்வார்களும் இசையோடு பாடல்களைப் பாடிக் கோயில் தோறும் இறைவனை வழிபட்டனர். சைனரும் பௌத்தரும் புலனடக்கத்தையும் உண்ணு நோன்பு இன்ப வெறுப்பு முதலியவற்றையும் மக்களிடையே வற்புறுத்திக்கொண்டிருந்தனர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தியையே போற்றி வளர்த்த பெரியார்கள். இல்வாழ்க்கையில் இன்பமாக வாழ்ந்தாலும், எத்தொழிலைச் செய்தாலும், உள்ளத்தை இறைவனுக்கு உரியதாக வைத்து வாழ்க்கை நடத்தினால் போதும் என்றனர் இப்பெரியார்கள்.

இப்பெரியார்களுள் பக்தி இயக்கம் மக்களிடையே பரவுவதற்கு இசையோடு அமைந்த தமிழ்ப்பாடல்கள் துணை செய்தன. இசைப்பாடல்களில் மக்களிடையே வழங்கும் பழமொழிகளையும் கலையுணர்ச்சியுடன் கையாண்டதால இவர் தம் கருத்துகள் மக்கள் உள்ளத்தில் வேர்விட்டு நன்கு வளர்வதற்கு இவை காரணமாயின. இந்தப் பக்திப் பாடல்களில் பழமொழிகள் அமைந்துகருத்துக்களைத் தெளிவாக்குவதைக் காணபோம்.

கார்ஆர் பரவிஏழ் பூண்ட தனிஆழி
தேர்ஆர் நிறைகதிரோன மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா அமுதம அங்குஎய்தி அதில்நின்றும்
வாராது ஒழிவதுஒன்று உண்டோ? அதுநிற்க
ஏரார் முயல்விட்டுக் காக்கைபின போவதே!
(சிறிய திருமடல்-கண்ணி 6-8)

என்ற பாசுரப்பகுதியில் 'முயலைவிட்டுக் காக்கையின் போவாருண்டோ?' என்ற பழமொழியைக் காணலாம். நிலத்தில் ஓடுவது முயல்; மரங்களின் மீது பறந்து திரிவது காக்கை. மாமிசம் வேண்டுவோன் கைப்பட்ட முயலை விட்டுக் கைப்பட அரியதும் கைப்பட்டாலும் பயன்படாததுமான காக்கையைப் பின்பற்றித் திரிதல் அறிவற்றசெயல். அப்படியே எளிதாயும் சுவைமிக்கதாயுமுள்ள அர்ச்சாவதார அநுபவத்தை விட்டுக் கிட்டுதற்கு அரிதாயும் சுவையற்றதாயுமுள்ள மோட்ச அநுபவத்தைப் பெற விரும்புதலும் பேதைமையின விளைவாகும் என்று விளக்குவர் பரகாலர். (இதனைநாயகி நிலையிலிருந்து பேசுகின்றார்)

இந்தப் பழமொழியை அப்பர் பெருமான் கையாண்டுள்ளார்.

என்பிருத்தி நரம்புதோல புக்ப் பெய்திட்டு
என்னையோர் உருவ மாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினை தீர்த்திட்டு
என்னுள்ளம் கோயி லாக்கி
அன்பிருத்தி அடியேனைக் கூழாட் கொண்டு
அருள்செய்த ஆரூ ரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல் விட்டுக்
காக்கைப்பின் போன வாறே ''
(தேவாரம் - 4.5:2)

'அடியேனை ஆட்கொண்ட ஆரூரரின் முன்பு இருக்கின்ற வாய்ப்பினைவிட்டு வேறு சமயத்தில புகுந்து உழல்கின் றேனே' எனறு சைவ சமயததை விட்டுச் சமண சமயததைத் தழுவின நிலையை நினைந்து கழிவிரககம் கொளளுகின்ருர் அடிகளார் ஈண்டு சைவ சமயததை முயலாகவும் சமண சமயத்தைக் காக்கையாகவுமகொண்டு கருத்து தெளிவாகக் பெறுதலை உணரலாம.

சமண சமயததைச் சாரந்து மீண்ட நாவுககரசர் பெருமான் திருவாரூர்ப் பதிகம் ஒன்றுள (தேவாரம 4 5) ஒவவொரு திருப்பாடலின் ஈற்றிலும் ஒவ்வொரு பழமொழி அமையப்பாடி யிருப்பதை நோககினல், இப்பெருமானும் சமண சமயத்தவா போற்றிக் கையாளுமஇயல்பையே கொண டார் போலும் எனறு நினைக்கச் செய கினறது.

கனியிருக்கக் காய் கவர்நத
கள்வனேனே.
அறம இருக்க மறம விலைககுக்
கொண்டவாறே
கரும்பிருக்க இரும்புகடித்
தெய்தவாறே.

என்பன போன்ற பழமொழிகள் இப் பதிகத்தில் அமைந்து கிடப்பதைக் காணலாம். அப்பர் அடிகட்குக் காலத்தால் பிற்பட்டவர் திருமங் கையாழ்வார். 'தாணடவ வேந்து' எனப் போற்றப்பெறும் அப்பர்பெருமானின் திருத்தாணடகத் திருப் பாடல்கள் திருமங்கை மன்னனுக் குத் தாணடகம பாடும் வழியை அமைத்துத் தந்திருததல் வேண்டும் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். பழமொழிகளை அமைத்துப் பாடும முறையையும் இப்பெருமாளிடமிருநதே பெறறிருகக வேண்டும் என்று நினைககத் தோன்றுகினறது. 'பழமொழியால பணிநதுரைத்த பாடடு' என வழங்கபபெறும திருமங்கை மனனனின திருமொழிப பாசுரம (பெரிதிரு. 10 9) ஒவவொனறிலும ஒவ்வொரு பழமொழி அமைந்திருபபதைக காணலாம் இத்திருமொழி தலைவியின் ஆற்றுமையைக கண்டு இரஙகிய திருததாயாா தலைவனை வேணடுவதாக அமைநதுள் ளது திருததாயாா எம்பெருமானை நோககி, "பிரானே, இவளை நீ இங் ஙனம நோவுபட விட்டிருப்பது தகுதியோ? பரத்துவத்தின் மேல்எல்லையில் நிற்கின்ற நமக்கு இப்பெண் பிள்ளை ஒரு பொருளோ? என்று அலட்சியமாக இவளை நினைததிடுக கின்ருய் போலும் இதுதானே உன பெருமைக்குத் தகுவது?" என்று ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொரு பழமொழியை எடுத்துரைததுப் பேசுகின்ற முகத்தாலே ஆழவார் தம்முடைய காதலின் தகுதியையும், அலட்சியம் செய்யாமல் தமமைக் கைப்பறறியாக வேண்டும் எனபதையும் விணணப்பம் செய்கினருா.

இத்திருமொழியின் முதற் பாசுரததை நோக்குவோம்.

புள்உரு ஆகி நாளிருள் வநத
பூதனை மாள, இலஙகை
ஒள்எரி மண்டி உண்ணப பணித்த
ஊக்கம அதனை நினைந்தோ?
களஅவிழ கோதை காதலும எங்கள்
காரிகை மாதர் கருத்தும்
பிளளைதன கையில கிண்ணமே ஒக்கப
பேசுவது? எந்தை பிரானே.

இதில் 'பிள்ளை கையிற கிண்ணம் மெல்லவே கொள்ளலாம்' என்ற பழமொழி அடைக்கப் பெற்றுள் ளது. "மிக்க வலிமையுள்ளவாகள் பொற்கிணண மொனறைக் கவர்ந் தால் அதைத் திரும்பவும் கைப் பற்றுவதற்கு அதிக முயறசி எடுக்க வேணடும்; ஆனல சிறு பிள்ளை கவர்ந்த கிணணத்தைக் கைப்பற்றக் கொள்ள வேணடுமாயின அதற்கு அதிக முயற்சிஎடுக்கவேணடியதில்லை. நினைதத போது எளிதாக வாங்கிக கொள்ளலாம் என்று வாளா இருக்க லாம்: பதறவேணடியதிலலை. அது போல இப்பரகால நாயகியை நீ நினைததிருக்கினருய்' எனறு கூறுவ தால், "இவளை அவவிதமாக அலட்சியம் செயதிருக்கின்ருய்" என்பதைக் குறிப்பிடுகினருர் திருத்தாயார்.

இதே பழமொழியை மணிவாசகப் பெருமானுமகையாணடுளளார்.

மையி லங்குநற கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட
பின்மழக்
கையி லங்குபொற கிணண'
மென்றலால்
அரியை யெனறுனைக் கருது
கின்றிலேன்
மெயயி லங்குவெண ணீற்று
மேனியாய்
மெய்ம்மை யனபருன
மெய்ம்மை மேவினுர்
பொய்யி லங்கெனப் புகுத விடடுநீ
போவ தோசொலாய் பொருத்த
மாவதே.
(திருவா. திருச்சத. 92)

இத்திருப்பாடலில் 'மழக்கையிலங்கு பொற்கிணணம்' என்பது பழமொழி. "உலகன்னையை ஒரு பக்கத்திலு டையவனே, திருவருளால் நீ எழுந் தருளி வநது எளியேனை அடிமை யாக்கிப் பணிநதுகொணடபின் இளங்குழந்தையின கையில் விளங்கு கினற பொன்னலாகிய கிண்ணம் போன்று உன்னை எளிமையாக நினைப் பதல்லால் அருமையுடையாய் என்று நினைககினறிலேன்......" என்கின்ருர்.

இங்ஙனம் அருளாசிரியர்கள் எடுத் தாளும் பழமொழிகளெல்லாம் உலக வழககில் வழங்கினவாறே எடுத் தாளப்படாமல் செய்யுள் நடைக் கேறபப் பலவாறு உருமாற்றியே வழங்கப் பெற்றிருத்தலைக் காண லாம்.ஒரே அரிய பழமொழி நம்மாழ் வாரின் திருவிருத்தத்திலும், மணி வாசகப் பெருமானின் திருவாச கத்திலும் கையாளப் பெற்றிருப் பது நம்மை வியக்க வைக்கின்றது. நம்மாழ்வார் நாயகி நிலையிலிருந்து பேசுகினருர்.

மைப்படி மேனியும் செந்தாமரைக்
கண்ணும் வைதிகரே
மெய்ப்படி யாலுன் திருவடி
சூடுந் தகைமையினுர்
எப்படி யூராமிலைக்கக் குருட்டா
மிலைக்கு மெனனுமு
அபபடி யானுமு சொன்னேன்
கடியேனமற றுயாதென்பனே?
(திருவிருத். 94)

"கணடார் கணகுளிரும்படியான உனது திருமேனியையும சிவந்த தாமரை மலர் போனறு இருககும் திருககணகளையும உடையவளான உனனுடைய திருவடித்தாமரைகளை மெய்யாகக் கண்டு தலைமேற்கொணடு அநுபவிக்கும் தன்மையுடையவர்கள் வேத வேதாநத ஞானத்திற் சிறநத மகான்களேயாவர்; அறிவிலியான நானும அவர்களைப்போல் ஏதோ சொல்லுகின்றேன். இஃது என் போலவெனில்: நன்ருய்க் கண்

தெரிநத பசுககள் ஊர் புகுநது சோறததும் மகிழ்வுறறு, அநத மகிழசசிககுப போககு வீடாகக் கனைக்கின்றன. கண்ணில்லாத குருட்டுப் பசுவும் அது கேட்டுத் தான இனனதெனறறியாமலே ஒககக் கனைக்கும் எனறு உலகம் சொலலும். வேதவிறபனனாகள் சொனன பாசுரத்தைக கேட்ட ஞானத்தாலே சொலலுகினறேனேயனறி, என ஞானத்தால கண்டு என ஆறறலால சொலலவிலலை'' எனகினறாள் பராஙகுசநாயகி.

மணிவாசகப் பெருமானும் இதே பழமொழியைக கையாண்டு பாடுகினறா.

தாராய உடையா யடியேற்கு
உன்தாள் இணையன்பு
ரோ உலகம புக்காரடியார்
ஊரா மிலேககக் குருடடாமிலேத்
தாஙகு
உன்தாள் இணையன்புக்
காராய் அடியேன் அயலே
மயலகொண் டழுகேனே.

(திருவா. திருசசத. 87)

''சிவனே, நின அடிமையாகிய எளியேனுக்கு உன் திருவடித் தாளிணையின் மெய்யன்பினைத் தநதருளக; நின மெயயடியார் என்றும் மீளா உலகம் புககனா, அடியேன புறமே போந்தேன; ஊாபசுக்கள் கனைதத காலதது அதனோடுள்ள குருட்டுப் பசுவும் கனைத்தலையொபப நின் திருவடிககண் வைககும துயப்பாகிய அநுபவ மெயயனபில்லாத யானும மெயயனபு வேண்டி அவாககொண்டு அழுகின்றேன'' எனகினறா. இநத இரண்டு ஞானச செலவாகளின் நைச்யானுசநதானததை (தாழவை வாய விட்டுக கூறுதலை) அவா தம திருப பாடல்களில் காணலாம. பழமொழியில அவாதம உளளக கிடககை தெளிவுறுதலையும கணடு மகிழலாம

ஒரே பழமொழி பெரியாழவாா பாசுரததிலும வாதவூரடிகளின திருப்பாடலிலும கையாளப் பெறறுள்ளது.

நெய்க்குடத் தைபபறறி யேறும
எறும்புகளபோல் நிரந்து எங்கும
கைக்கொண்டு நிறகினற நோயகாள்!
காலம பெறவுய்யப போமின,
மெய்க்கொண்டு வந்து புக்கு
வேதப பிரானுர் கிடந்தார்
பைக்கொண்ட பாமபணையோடும
பண்டன்று பட்டினம காபபே.

(பெரியாழ. திரு. 5.2 1)

இதில 'நெய்க்குடததை எறுமபுகள மொய்ததாறபோல' எனபது பழமொழி. ''சேமிதது வைககப பெறறுளள நெய்க்குடததை எறுமபுகள ஏறி மொயததாறபோலஎன உடமபு முழுவதும பரவியிருககினற நோயகளே! இனி இவவான்மா உங்கள பட்டினம அனறு; எமபெருமான தனது 'அரவத்துஅமளியோடு' விருமபிப்பளளி கொணடிருக்கும் இடம ஆயிறறு இவவானமா.அவனது காவலில அகப்பட்ட இவவுடலிடத்து இனி உங்களுககுப பிழைத்திருகக வழி இல்லை. விரைவாக வேறிடததை நாடிப் போய விடுஙகள'' எனகினறாா ஆழ்வாா.

உள்ளன வேறிறக இலலன
செய்யுமை யிலதுமனி
வெள்ளன லேனே விடுதிகண்
டாய்வியன மாத்தடக்கைப
பொள்ளனல வேழத் துரியாய்
புலனினகட போதலொட்டா
மெள்ளன வேமொய்க்கு நெய்க்குடந்
தன்னை எறும்பெனவே

(திருவா. நீத்தல்விண். 24)

எனபது திருவாசகததிலுள்ள திருப் பாடல. இதில மணிவாசகர் கூறுவது; ''எறும்புகள் மோபபததால் தேடிச் சென்று நெய்க்குடம ஒனறை மொயப்பது போனறு ஐம் பொறிகள் என்னை உனனிடம் போகவொட்டாது தடுதது என உடலைத தேய்க்கின்றன. அதறகு உடநதையாயஇருககும நான் மெயபபொருள நாட்டம் கொள்கினறேன இலலை. மயககத்திற்கு உடபடடுப பொயமமையானவறறையே செய்து வீண பேசசைப் பெருககிக கொணடிருக கொணடிருககினறேன. எனினும், எனனைக கைவிட்டு விடாதே'' எனறு சிவபெருமானை வேணடுகினறா ( இரண்டு அருளாசிரியாகளும தததம் கருததை இபபழமொழியால் தெளிவாககுவதைக காணலாம்.

இனனொரு பழமொழி 'தாய இருககமணை நீராட்டுதல?' எனபது முழு முதலாம முதறகடவுள திருமால் இருக்க பிறதெயவ வழிபாடு செய்யும உலகினர் இயல்பை இப் பழமொழியால் விளககுவா பரகாலா.

பேயஇருக்கும நெடுவெள்ளம
பெருவிசும்பின்
மீதுஓடிப பெருகுங் காலம
தாயஇருக்கும வண்ணமே உமமைத்
தன
வயிறுஇருத்தி உய்யக்கொண்டான
போயஇருக்க மற்றுஇங்கோர்
புதுத்தெய்வம
கொணடாடும தொணடீா! பெறற
தாயஇருக்க மணைவெநநீர்ஆட்டுதிரோ
மாட்டாத தகவு அறறீரே

(பெரி திரு. 11 6 6)

எனற பாசுரததில இவவிளககததைக காணலாம ஈணடு தாய எனபது திருமாலுககும, மணை எனபது அசேதனப பொருளகட்கும உவமைகளாக வநதன மகளிா கருவுயிாததவுடன் தாயையும சேயையும நீராட்டுதல மலைநாட்டு வழககமாக முறகாலதததில் இருநதது கருவுயிாத்தவுடன தாயை நீராட்டுவது பல வித இடையூறுகட்குக காரணமாவதால அததாயககுப பதிலாக ஒரு மணைககட்டையை நீராட்டுவிப்பது இடைககாலதது வழககமாக இறறைககும் இருந்து வருகின்றது. இதனைத் திருவுள்ளம் பறறி அருளிச் செயகினறபடி. இது வேததாநதரத்தை வழிபாடு செயவதறகும மணை நீராட்டுவதறகும யாதொரு வேறுபாடும் இலலை' 'இதுதான அது, அதுதான இது' எனற இரண்டுககுமுளள வேறறுமையைக காட்டினபடியாகும நமமாழவாரும் இதே கருத்தைத தம திருவாசிரியததில,

ஈனறோளிருகக மணைநீராட்டி.

(திருவாசிரி. 6)

எனறு அருளிச செய்துளளாா.

இஙஙனம தொனறு தொட்டு வரும பழமொழிகள பகதி இலககியஙகளில பாஙகுடன கையாளப பெறறு உயா கருததுகளைத தெளிவாகக உதவும மணிவாககுகளாக அமைகினறன என்பதை அறியலாம. தேவாரம, திருவாசகம, நாலாயிரத திவவியப பிரபந்தம போனற பகதிப் பனுவல்களில இவை மிகச சிறப்பாகக கையாளப பெறறுளளன. தமிழக காவியஙகளிலும இவை இடம பெறறு பொருட்சிறப்பினை நல்குகினறன.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED
AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T T D. PRESS, TIRUPATI-517501




# ஸப்தகிரி

ஏப்ரல், 1984

விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்